# பதிப்புரை

"நிவேதிதா"வின் இரண்டாவது படையல் இந்த நடைச் சித்திரக்களஞ்சியம்.

வாழ்வியல் சிந்தனைகளை தனக்கேயுரிய நடை அழகுத் தமிழில் முன்னாள் அரசவைக் கவிஞர் - புலவர் - புலமைப்பித்தன் அவர்கள் இப்புத்தகத்தில் பதிவு செய்துள்ளார்கள்.

ஆழ்நிலைக் கருத்துக்களை மிக எளிமையாக உள்வாங்கிக் கொள்ளும்வகையில் படைக்கப்பட்ட காலப்பெட்டகம் இந்நூல்.

இப்படைப்பினை நாங்கள் பதிப்பித்து வெளியிடுவதில் மகிழ்ச்சி அடைகிறோம். இப்பதிப்பு வெளிவருவதில் ஒத்துழைத்த அனைவருக்கும், மகிழ்வோடு இசைவு தந்த புலவர் புலமையார் அவர்களுக்கு நன்றி.

**S.R. சுவாமிநாதன்**

# முன்னுரை

இந்த 'வழிப்போக்கனின் சிந்தனை'களை நான் இருபது ஆண்டுகளுக்கு முன்னர் 'தாய்' வார இதழில் தொடர் கட்டுரைகளாக எழுதியுள்ளேன்.

சூலூரில் தோன்றிச் சுடலையூர் போய்ச் சேர்கிறவரை இந்த வாழ்க்கைப் பயணத்தை மேற்கொண்டிருக்கும் எல்லோருமே வழிப்போக்கர்கள்தாம்.

இந்தப் பயணம் ஒரு நிமிஷமாகவும் இருக்கலாம். ஓராண்டாகவும் இருக்கலாம். ஏன் நூற்றாண்டுகளாகக் கூட இருக்கலாம்.

நான் இலக்கியங்களைப் படித்ததைக் காட்டிலும். இயற்கையை, இந்த உலகத்தை அதிகமாகப் படித்திருக்கிறேன். இன்றும் படித்துக் கொண்டிருக்கிறேன்.

எப்போதுமே நான் ஒரு மாணவனாகத்தான் இருந்திருக்கிறேன். இப்போதும் அப்படித்தான் இருக்கிறேன். நேற்று விளங்காதது இன்று விளங்குகிறது. நேற்றுயிருந்த அறியாமை இன்று விலகுகிறது. இன்னும் எனக்குள்ளே எத்தனை அறியாமைகள் இருக்கின்றன என்பது நாளைக்குத்தான் தெரியும்.

நம் அறியாமையை நாம் கண்டு கொள்வதுதான் அறிவு. நான் படித்தது கொஞ்சம். அனுபவித்துப் பார்த்தது அதிகம். அதன் மூலம் நான் கண்டறிந்தவற்றை சிந்தித்துத் தெரிந்தவற்றை எனக்குத் தெரிந்த வரையிலே எதைஎதையோ எழுதியிருக்கிறேன்.

உலகத்தில் நல்லது - கெட்டது, இன்பம் - துன்பம், தேவையானது - தேவையற்றது என்ற வேற்றுமைகள் ஒவ்வொருவருடைய பார்வையையும் பட்டறிவையும் பொறுத்தே அமைகின்றன.

ஒரு நன்மைக்கு கூட ஒரு தீமை காரணமாக இருந்து விடுகிறது. அதனால் தீமையைத் தீமை என்று எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை. நாம் செய்கிற தவறுகளே கூட பல நேரங்களில் நமக்குப் பாடமாக அமைந்துவிடுகின்றன.

நான் யார் எப்படிப்பட்டவன் என்று என்னை இதுகாறும் அறிந்திருக்கிறவர்கள், அறிந்து வைத்திருக்கிற புலமைப்பித்தனில் இருந்து சற்று வேறுபாடான புலமைப்பித்தனை இந்த எழுத்துக்கள் மூலம் தெரிந்து கொள்ளக்கூடும்.

எல்லாருக்கும் இரண்டு பக்கங்கள் உண்டு. எனக்கும் அவை உண்டு. இந்த வழிப்போக்கனின் சிந்தனைகள் மூலம் இதுவரை என்னை அறிந்தவர்கள் அறிந்திராத ஒரு பக்கத்தை - என் மறுபக்கத்தை இதில் காணக்கூடும்.

அந்த மறுபக்கம் எந்த அளவுக்கு உணரப்பட்டாலும் படட்டும். படிக்கின்ற அன்பர்களும் நண்பர்களும் உரையிட்டு பார்க்கட்டும்.

இதை நூலாக்க முயற்சி எடுத்துக் கொண்ட அன்பு சகோதரர் முத்துக்குமாரசாமி அவர்களுக்கும், நூலாக்கிய நிவேதிதா பதிப்பக உரிமையாளர் நண்பர் திரு. சுவாமிநாதன் அவர்களுக்கும் என் தமிழ் நெஞ்சார்ந்த நன்றி.

அன்பன்
**புலமைப்பித்தன்**

# பொருளடக்கம்

# ஒரு வழிப்போக்கனின் சிந்தனை

## ஆசைகள்

ஆசைதான்
துன்பத்திற்குக் காரணம்
ஆசையை அறுத்துவிடு
புத்தன் சொன்ன தத்துவம்

யாதனின் யாதனின்
நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்
வள்ளுவன் உரைத்த வாய்மொழி

வாய்மொழியா? இல்லை
வாய்மைமொழி
ஆம்
ஆசையை அகற்றிவிட்டால்
துன்பம் இல்லைதான்



துன்பம் மட்டுமா; இல்லை
துன்பங்களின்
விளையாட்டுத் திடலாக இருக்கின்ற
இந்த உலகமும்
வாழ்க்கையும் கூடத்தான் இல்லை.
மனிதனை
வாட வைப்பதும் ஆசைதான்!

மனித மனத்தைக்
கற்பனை சுகங்களில்
மிதக்கவிட்டு
வாழ வைப்பதும் ஆசைதான்!

மண்ணும் வேண்டாம்
பொன்னும் வேண்டாம்
பெண்ணும் வேண்டாம்
என்பது சொல்வதற்கும்
கேட்பதற்கும் எளிது

நடைமுறைக்கு...?
இந்த விரக்தி வேதாந்தங்கள்
நடைமுறைக்கு வந்திருந்தால்
உலகத்தின் உயிர்மூச்சே
நின்று போயிருக்கும்!



ஒருபிடி புல்லுக்கட்டைப்
பார்த்துக் கொண்டே...
அதைக்
கொண்டு போகிறவனைத்

தொடர்ந்து போய்க்கொண்டிருக்கும்
ஆட்டுக்குட்டியைப் போல,
இந்த உலகம்
ஆசைகளைக் காட்டித்தான்
நம்மை
அழைத்துப் போய்க் கொண்டிருக்கிறது.

இந்த ஆசை என்னும்
ஊறுகாய் மட்டும்
இல்லாமல் போயிருந்தால்
வாழ்க்கைச் சோறே
இறங்காமல் போய்விடும்

ஆசையைத்
துறந்துவிட நினைப்பதேகூட
ஓர் ஆசைதான்-
துன்பத்தில் இருந்து
விடுதலை பெறவேண்டும்
என்ற துடிப்பு!

கல்லுடைப்பவன் காரில் போக
ஆசைப் படுவதும்
மண்குடிசையில் வாழ்பவன்
மாளிகை வாசத்தில்
மனம் வைப்பதும்
அநியாயங்கள் அல்ல;
நியாயங்களே!



உழைப்பையும் முயற்சியையும்
ஊட்டி வளர்க்கும் செவிலித்தாய்
இந்த ஆசை!

சரித்திரம் படைத்த
சாதனை மனிதர்கள் யாவரும்
ஆசையின் கைகளில்
ஆளானவர்கள்தாம்!

கால்வைக்கும் இடமெல்லாம்
துன்பம் என்னும்
கல் தட்டிவிட்டு
ஒவ்வொரு முறையும்
விழுந்தாலும்
எழுந்து இடைவிடாது
தொடர்ந்து நடப்பதற்கான
வேகத்தையும் வலிமையையும்
தருவது
இந்த ஆசைதான்!



ஆசைதானே
ஒருவன் மற்றவனை அழிப்பதற்கு
காரணமாய் இருக்கிறது?
உண்மைதான்!

ஒருவனை ஒருவன் அழிக்காமல்
உலகம் என்று இருந்தது?
என்றுதான் இருக்கப்போகிறது!

ஒருவனை ஒருவன்
அடுதலும் தொலைதலும்
புதுவ தன்றிவ
இவ்வுலகத்தியற்கை!

உலகத்தின் இயல்பே
ஒருவனை ஒருவன்
அழிப்பதும்
அழிந்து போவதும்தான்!
பக்கம் பக்கமாக
வரலாறு எழுதிவைத்துப்
படித்துக் கொண்டிருக்கிறோமே
மாவீரர்கள் என்று;
அந்த வரலாற்று நாயகர்கள்
எல்லோருமே
மரியாதைக்குரிய
கொலைகாரர்கள்தாமே!

அடுத்த வேளை
சோற்றுக்கு வழியில்லாதவன்
ஐந்து ரூபாய்க்கு
லாட்டரிச் சீட்டு
வாங்கிக்கொண்டு போகிறான்.



கூலிக்காரனுக்குக்
கோடீசுவரக் கனவு;
அந்தக் கனவு
தவறானதாக இருக்கலாம்

ஆனால்
இந்தக் கனவுகள் என்னும்
காகித ஓடங்கள்தாம்
மனிதர்களைக் கரைசேர்த்துக்
கொண்டிருக்கின்றன

ஒரு பொட்டலத்தில் இருக்கும்
வேர்க்கடலைகளை
ஒவ்வொன்றாக எடுத்து
வாயில் போட்டுக் கொண்டு
வழிநடைச் சிரமம் தெரியாமலே
நடந்து போவதைப்போல

ஆசைகளைக்
கொறித்துக்கொண்டும்
அசைபோட்டுக்கொண்டும்தான்
அவலக் கவலைகளே நிரம்பியிருக்கும்
வாழ்க்கைப் பாதையில்
காலமெல்லாம்
நடந்து கொண்டிருக்கிறோம்!



ஆசைக்கு அளவில்லை
என்று சங்கடப்படத் தேவையில்லை;
சந்தோஷப்படலாம்!
ஆசைக்கு மட்டும்
அளவிருந்திருந்தால்
வாழ்க்கைப் பாதையில்

எதை வைத்து
அசை போட்டுக்கொண்டு
நடப்பது?

ஆசைகள் ஆகாயத்தைப்
போன்றவை!
ஆகாயம் என்பது என்ன
போகும்வரை
போய்க்கொண்டே இருக்கும்
சூன்யம்!

ஆசைகளும்
நாம் வாழும்வரை
வாழ்ந்துகொண்டே இருக்கும்
சூனியங்கள்!
அந்த ஆகாயச் சூனியத்தில்
சொர்க்கம் இருப்பதாக
நம்பவில்லையா;
அப்படித்தான்
இந்தச் சூனிய ஆசைகளிலும்
சுகம் இருப்பதான
நம்பிக்கையின் பேரில்
நாட்கள் நகர்ந்து கொண்டிருக்கின்றன!



மனக்கோட்டை கட்டுவதாகச்
சொல்கிறோமே;
அந்த

மனக்கோட்டை கட்டும்
மயனுக்கு பெயர்தான்
ஆசை!

அந்த
மனக்கோட்டைகளுக்கு
அஸ்திவாரமும் ஆசைதான்;
அதற்கான
செங்கல் சுண்ணாம்பு
சிமெண்ட் எல்லாமே
இந்த ஆசைகளின்
உற்பத்திப் பொருள்கள்தாம்!



இருப்பதுபோல் இருந்து
இடிந்து தகர்ந்து
ஏக்கங்களுக்கும் துக்கங்களுக்கும்
ஆளாக்கும் மனக்கோட்டைகள்
எதற்காக என்றால்

நிற்பதுபோல் நின்று
நில்லாமல் விழுந்து
மறைந்து போகும்
இந்த மானுடம்
மாறி மாறிக் குடியிருப்பது
இந்த மனக்கோட்டைகளில்தான்!

கணம் கணம்
இந்த மனக்கோட்டைகள்
இடிந்து போகின்றன;
மீண்டும் புதுப்பிக்கப்பட்டு
எடுத்து நிறுத்தவும்படுகின்றன!

பறவையைப் போலப்
பறக்கவேண்டும்
என்ற ஆசை
விமானமாக வந்தது!

மீன்களைப் போல
நீந்தவேண்டும்
என்ற ஆசை
கப்பலாய் மிதந்தது

அறிவியல்
கண்டுபிடித்துத் தந்திருக்கும்
அத்தனையுமே
ஆசைகளின் கர்ப்பத்தில்
இருந்து பிறந்தவைதான்!



"ஒடுவிழுந்து சீழ்ப்பாயும்
ஒன்பதுவாய்ப் புண்ணுக்கு
இடுமருந்தை
நான் கண்டுகொண்டேன்"
என்று பாடிய
பட்டினத்துப்பிள்ளை

நடந்து செல்ல
பாதை போட்டுக் கொடுத்ததும்
வழிபடக் கோயிலைக்
கட்டிக்கொடுத்ததும்கூட
எந்த ஆசைகளைப்
பட்டினத்தார்
அறுக்கச் சொன்னாரோ
அந்த ஆசைகள்தாம்!

வேண்டாம் என்று
வெறுக்கப்படும் எதுவும்
உண்மையில்
இந்த வாழ்க்கைக்கு
வேண்டும் எனும்
ஒன்றாகவே இருக்கிறது!

மருந்து வேண்டும்
என்கிறோம்!
விஷம் வேண்டாம்
என்கிறோம்!
ஆனால்;
மருந்துக்கே விஷம் வேண்டுமே
என்ன செய்வது!



ஆசைகள்
துன்பம் என்னும்
குழந்தைகளின்
மகப்பேறு நிலையங்கள்தாம்!

ஆனால்
இந்த ஆசைகள் மட்டும்
அவதரிக்காமல் போய்விட்டால்
வாழ்க்கையே
அர்த்தமற்றதாய்ப் போய்விடும்

ஆசையில்லாமல்
துன்பம் இல்லை என்பது
எத்தனை உண்மையோ
அத்தனை உண்மை
துன்பமில்லாமல்
வாழ்க்கை இல்லை என்பதும்

எனவே
துன்பம் இல்லாமல் வாழ்க்கையில்
ஆசை என்பது
இல்லாமல் போகுமா?
ஆசைகள்
வாழ்க்கையின் அர்த்தங்கள்
ஆதார சுருதிகள்!





# வாழ்க்கை

வாழ்க்கையை
தோளிலே போட்டுக்கொண்டு
நடந்து கொண்டிருக்கிறேன்;
தோல்சலிக்க
கால்வலிக்க
நடந்து கொண்டிருக்கிறேன்!

மூன்று வேளையும்
சோறு கிடைத்தால்
வாழ்க்கை சுகமாக இருக்கும்!



அடுப்பிலே நெருப்பு
அணையாமல் எரிந்தது!
வயிற்றிலே நெருப்பு
எரியாமல் அணைந்தது!

சோறு வந்தது;
வாழ்க்கையில்
சுகம் வரவில்லை!

இருந்த வீடு - வாடகைவீடு!
"எனக்கென்று ஒரு வீடு;
சொந்தமாக ஒருவீடு!"
இப்படி நினைத்தேன்.

வீடு; சொந்தவீடு
வாங்கிக்கொண்டேன்!
வாழ்க்கையில் எதிர்பார்த்த
சுகம், நிம்மதி வரவில்லை!

இது என்ன
கண்ணாமூச்சி விளையாட்டு!
வாழ்க்கைக்கு இன்னும் இன்னும்
ஆடை அணிகள்!
உழைத்தேன்;
கடுமையாக உழைத்தேன்!
அவையும் வந்துவிட்டன
சுகமும் நிம்மதியும் வரவில்லை;
அடம்பிடித்தன!



மீண்டும்
ஒரு கார்மட்டும் இருந்தால்...?
ஆம் அதுதான் பாக்கி!
மேலும் உழைத்தேன்;
காரும் வந்து சேர்ந்தது!

வாழ்க்கைக்குத் தேவை
என்று நான்

நினைத்ததெல்லாம் வந்துவிட்டன!
கர்வத்தோடும் கம்பீரத்தோடும்
வேகமாக வேகமாகப்
போய்க்கொண்டிருந்தேன்

போகும் வழியில்...
எங்கோ எங்கோ
வாழ்க்கையே
தொலைந்து போய்விட்டது!

இந்த வாழ்க்கைக்காக என்று
எவற்றை எல்லாம்
தேடி அலைந்தேனோ
அவற்றையெல்லாம் தேடிக்கொண்டேன்!

ஆனால்;
எந்த வாழ்க்கைக்காக
அவற்றைத் தேடினேனோ
அந்த வாழ்க்கை
தொலைந்து போய்விட்டது!
தொலைந்தே போய்விட்டது!



# கூழாங்கல்

ஆறுகள்...
மண்மகளின் இரத்த ஓட்டம்!
பூமிக் குழந்தைக்கு
இயற்கைத்தாய் ஊட்டும்
தாய்ப்பால்!

எப்போதும் வற்றாமல்
ஓடிக்கொண்டிருக்கும்
ஆறுகளை
ஜீவநதிகள் என்கிறோம்!



அந்த நதிகள்
பூமியின் ஜீவன் என்பதால்
இந்த ஆறுகளும்
ஆற்றோரம் வளர்ந்திருக்கும்
தென்னந்தோப்புகளும்
மண்ணின் சொர்க்கங்களாக
என் கண்ணில் தெரிகின்றன!

பௌர்ணமி நிலாக்
காய்கிற நாட்களில்
கோவை மாவட்டம் பேரூர்
நொய்யல் ஆற்று மணலில்
சாய்ந்து படுத்த வண்ணம்
தென்னோலைகளின்மேல்
நிலவொளிபட்டுத் தெறிக்கும்போது
வானத்தில் இருந்து
வைரமழை பொழிந்த
காட்சியை நான் பார்த்து
ரசித்த காலங்கள் சுகமானவை

"வெள்ளி வெண்குடத்துப்
பால் சொறிவதுபோல்"
என்று சீத்தலைச்சாத்தனும்
"நீலவான் ஆடைக்குள்
உடல் மறைத்து"
என்ற பாட்டில்
என் ஆசான் பாரதிதாசனும்
கண்ட கற்பனையின்
ஆழத்தையும் அழகையும்
அற்புதத்தையும்
அவற்றின் அர்த்தத்தையும்
அந்தக் காட்சிகள்
எனக்குக் கற்றுக்கொடுத்தன!



நான்
பேரூரில் படித்துக்கொண்டிருந்த
காலத்தின் பெரும்பகுதி
அந்த ஆற்றோரத்தில்தான் கழிந்தது!

அந்த ஆற்றையும்
ஆற்றோரத்துத் தென்னந்தோப்பின்
அழகையும் அமைதியையும்
நான் கண்டு
இரசித்திருக்கிறேன்!
அந்த அழகைக் காதலித்துக்
கள்வெறி கொண்டிருக்கிறேன்!

ஆற்றோரத்தில்
நடந்து போகிறபோது
வெள்ளையும் இளஞ்சிவப்பும் கலந்த
கூழாங்கற்களை
நான் கையில்
எடுத்து வைத்துக்கொண்டு
அதன் வண்ணத்தையும் வடிவத்தையும்
என்னை மறந்து
பல நேரங்களில்
இரசித்துப் பார்த்திருக்கிறேன்!



நடைபாதையிலே;
வீதியிலே;
கிடக்கிற வெறுங்கல்.

நதியோரத்திலே கிடக்கிற
கூழாங்கல்;
இரண்டும் கல்தான்!

வீதியிலே கிடக்கின்ற கல்லுக்கு
ஒழுங்கான வழவழப்பான மேனியும்
மென்மை அழகும் இருக்கவில்லை!

கூழாங்கல்லுக்கு மட்டும்
அந்தக்கொள்ளை அழகு
மேனியெங்கும்
எப்படி வந்தது?



அந்தக் கல்
பிறக்கும்போதே
அப்படியா பிறந்தது?
இல்லை;
அப்படி ஆக்கப்பட்டிருக்கிறது!

எந்த ஒழுங்கான வடிவமும்
இல்லாத கல்லுக்கு
வடிவம் வழங்கும் சிற்பியைப்போல
இந்தக் கூழாங்கல்லுக்கு
யார் அந்த
வடிவத்தைக் கொடுத்தது?

காலம்!
அது நடந்து வந்த பாதை!

அதன் பயணத்தில்
அது பெற்ற அனுபவம்!
இவைதான்
கூழாங்கல்லை
அப்படி ஆக்கி இருக்கிறது!

இந்த ஆறு
எங்கிருந்து புறப்பட்டது?
அதோ அந்த மலைமகளின்
கர்ப்பப்பையில் இருந்து
அருவியாகப் பிறந்து
ஆறாக வளர்ந்து
இப்போது ஓடிக் கொண்டிருக்கிறது!

அந்த அருவி
புறப்பட்ட இடத்தில் பிறந்த
இந்தக் கூழாங்கல்லும்
வீதியிலே கிடக்கும்
வெறுங்கல் போலத்தான்
ஓர் ஒழுங்கான
வடிவமும் வண்ணமும்
இல்லாமல் கிடந்திருக்கும்!



அருவி தலைகீழாக
குதித்து உருண்டு புரண்டு
வருகின்ற வேகத்தில்
கரடு முரடான

எத்தனையோ கற்கள்
அடித்து வரப்பட்டிருக்கும்

வரும் வழியில்
வரும் வேகத்தில்
பள்ளத்தாக்குகளில் கிடந்த
பாறைகளின் மீது
மோதி மோதி உருண்டு
புரண்டு வந்து சேர்ந்திருக்கும்.

ஒவ்வொரு வலிவான
பாறையின் மீது
மோதுகிற போதும்
கற்களின் கரடுமுரடான பகுதிகள்
அடிபட்டு அடிபட்டு
ஒழுங்குபடுத்தப்பட்டிருக்கும்.

அருவி புறப்பட்ட
மலையின் மடியில் கிடந்த
ஒழுங்கற்ற இந்தக் கற்கள்தாம்
சம நிலத்தில் பாய்ந்த
ஆற்றோரத்தில்
கூழாங்கற்களாக மாறியிருக்கின்றன!



வழி நெடுகச்
சாதாரணமான கற்கள் பட்ட
அடியும் அனுபவமும்தான்
இந்தக் கற்களைக்
கூழாங்கற்களாய் ஆக்கியிருக்கின்றன!

அனுபவம் பட்டறிவு
இல்லாத மனிதனும்
வீதியில் கிடக்கிற
வெறுங்கல்லும் ஒன்றுதான்!

பள்ளிக்கூடங்களும்
பல்கலைக் கழகங்களும்
தராத அறிவையும்
பக்குவத்தையும் தருவது
வாழ்க்கையில் அடிபட்டு அடிபட்டு
வருகிற அனுபவம்தான்! பட்டறிவுதான்!

மனிதன்
பிறந்து வளர்ந்து
வாழ்க்கை என்னும் வழிப்பயணத்தில்
நடந்து போகிறபோது
எத்தனை எத்தனையோ
கசப்பான - துன்பமான அனுபவங்கள்!



அவை
கல்லைப்போல் கரடு முரடாக
இருந்த மனித மனத்தை
ஒழுங்குபடுத்துகின்றன!
செப்பனிடுகின்றன!

ஒழுங்குபடாத - பக்குவப்படாத
மனத்திற்குள் உறவிருக்கும் அளவிற்கு

பகையும் இருக்கும்!
விருப்பிருக்கும் அளவுக்கு
வெறுப்பும் இருக்கும்!

பக்குவப்பட்ட மனம்
எல்லாவற்றையும்
ஒன்றாகவே பார்க்கிறது

**கெடுதி செய்வார் தனிலும் மேலாம்**
**நண்பர் வேறேது**
என்று பாட்டெழுதியவனுக்கு
வந்த ஞானம்
பள்ளியில் வந்ததும் அன்று;
பல்கலைக்கழகம் தந்ததும் அன்று;
அது பட்டறிவின் வெளிப்பாடு!



கட்டித்தந்த சோறும்
கற்றுத்தந்த கல்வியும்
ஒருமனிதனின் வாழ்க்கையில்
வழிப்பயணம் முழுதும் பலன்தரா!
பட்டறிவு / அனுபவம்
அதுதான் உண்மையான ஞானம்.

எனக்குள் கூழாங்கல்லை
எண்ணும்போதெல்லாம்
ஓர் அனுபவ முதிர்ச்சிபெற்று
உண்மையான ஞ்ானம் பெற்ற

பக்குவம் நிறைந்த
ஒரு மனிதனின் தோற்றம்தான்
மனக்கண்ணில் நிழலாடுகிறது!



எல்லாக் கற்களும்
கூழாங்கற்களாகவும் இல்லை;
எல்லா மனிதர்களும்
பக்குவம்பெற்ற
ஞானவானிகளாகவும் இல்லை!

கூழாங்கல்
அனுபவம் தந்த ஞானத்தின்
அடையாளச் சின்னம்!



# மறதி



கடற்கரை மணலில்
காதலர்கள் இருவர்
கைபிணைத்துக் கால்பதித்து
நடந்து கொண்டிருந்தார்கள்.

ஒரு பெரியவர்
கோல் ஊன்றியவாறு
தன் பேரக் குழந்தையோடு
தளர் நடைபோட்டுக் கொண்டிருந்தார்.

இளைஞர்கள் சிலர்
சடுகுடு விளையாடிக் கொண்டிருந்தனர்.
இரண்டு சிறுவர்கள்
மணலைக் கட்டிவைத்து அதற்குள்
கிளிஞ்சலை மறைத்து வைத்து
அதைக் கண்டுபிடிக்கும்
விளையாட்டு விஞ்ஞானத்தில்
ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள்.

அந்த மணல்வெளி முழுவதும்
குறுக்கும் நெடுக்குமாக-
சின்னதும் பெரியதுமாக-
காலடிச் சுவடுகள்;
தடங்கள்; தாரைகள்.
அன்றைய மாலைப்பொழுது
இரவுக்குள் விழுந்து மறைந்து
இரவும் முடிந்தது

காலைப்பொழுது
ஈழ விடுதலைப் போரில்
தமிழ் இளைஞர்கள்
சிந்திய ரத்தத்தைப்போல
சிவந்து விடிந்து கொண்டிருந்தது.
அந்த வைகறை வேளையில்
நான் அதே கடற்கரை மணலில்
நடந்து கொண்டிருந்தேன்!

நேற்றுமலை,
அந்த மணலில் நடப்பட்ட
காலடிச் சுவடுகளில் ஒன்றுகூட
இப்போது காணப்படவில்லை!
பூசி மெழுகப்பட்ட மாதிரி
நேற்று மாலை
காலடிபட்ட காயங்கள்; தழும்புகள்
எதுவும் தெரியாமல்
ஒரு புது மணற்பரப்பாகக்
காட்சி அளித்தது!



எங்கே அந்தச் சுவடுகள்?
காற்றடித்து மணல் மேவி
அந்தக் கடற்கரை மணலின்
காயங்கள் ஆறிப்போயிருந்தன!
அந்தச் சுவடுகள் முழுவதுமாக
மறைந்து போயிருந்தன!

கடற்கரை மணலின் சுவடுகள்
மறைவது போலத்தான்
உடலில் ஏற்படுகின்ற காயங்களும்
காய்ந்து குணமாகின்றன.

உள்ளத்திலும்
துன்பம் என்னும் காயங்கள்
ஏற்படுகின்றனவே;

இந்த மனங்களில் ஏற்படும்
இரணங்கள் எப்படி மறைகின்றன?
அதற்கு மருந்து எது?
மறதி!
கால ஓட்டத்தில் இயல்பாக ஏற்படும்
மறதிதான் மருந்து!
மனிதர்கள் நினைவைத்தான்
ஆற்றல் என்கிறார்கள்;



நல்ல ஞாபக சக்திதான்
மனிதனின் மாபெரும் செல்வம்
என்று மதிக்கிறார்கள்!

மறதியை பிழை, கெடுதல்
என்றுதான் எல்லோரும் கருதுகிறோம்

உண்மையில்,
நினைவல்ல ஆற்றல்!
மறதிதான் மனிதனுக்கு ஏற்படும்!
துன்பங்களை மாற்றிக் கொள்ள
இயற்கை தந்த ஆற்றல்
செல்வம்!

நான் நினைத்துப் பார்த்தேன்;
ஒரு மண்குடம்
அந்த மண்குடம் நிறையத் தண்ணீர்
அந்த மண்குடத்தின் கீழ்ப்பகுதியில்
ஒரு துளை இடுகிறோம்

அந்த ஒரே ஒரு துளையின்
வழியாகவே
அந்த மண் குடத்தில் இருந்த
தண்ணீர் முழுவதும் வடிந்து போகும்;
குடத்தில் ஒரு சொட்டுத்
தண்ணீரும் தங்காது!



ஒருக்கால்
நம் உடம்பும்
ஒரு மண் குடத்தைப்போல
ஒரு சிறு காயம் ஏற்பட்டதும்
நம் உடம்பில் உள்ள ரத்தம்

செந்நீர் முழுவதும் வடிந்துதான் போகும்
என்ற நிலை இருக்குமானால்
எந்த உயிரும்
உலகத்தில் வாழ முடியாது.

காயம் ஏற்பட்ட அளவுக்கு
இரத்தம் வடிகிறது;
இயற்கையிலே ரத்தத்திற்கு
உறைந்து போகும் இயல்பு இருப்பதால்
மேலும் ரத்தம் வடியாமல்
நின்று போய் விடுகிறது!



சாவில் இருந்து
இந்த ரத்த உறைதல்
நம்மைக் காக்கிறது.
உடல் என்பது வெறும்
மண்குடம் அன்று;
அது ஒரு நுட்பமான
இயற்கை விஞ்ஞானியின்
அறிய படைப்பு!

இப்படி
உடலில் ஏற்பட்ட காயத்தில் இருந்து
வழிந்த இரத்தம்
உறைந்து நின்றுவிடுவதைப்போல,
மனதில் ஏற்பட்ட
துன்பக் காயங்களின் நினைவுகளும்
தொடர்ந்து வடிந்து கொண்டே

இருக்காமல் தடுக்க
இந்த மறதி என்னும்
மருந்துதான் பயன்படுகிறது!

மறதி என்பது என்ன?
நினைவு உறைதல்!

இரத்த உறைதல் மட்டும்
மனிதனை மரணத்தில் இருந்து காப்பதில்லை;
நினைவு உறைதல்
என்னும் மறதியும்தான்
மனிதனைத் துன்ப நினைவுகளில்
துவண்டொழிந்துபோகாமல் பாதுகாக்கிறது.

ஒரு கணவன் இறந்து போகிறான்;
அவனில்லாமல் தான் இல்லை
என்று வாழ்ந்த மனைவி
இறந்துவிட்ட தன் கணவனின்
சடலத்தின்மேல்
புரண்டு புரண்டு மாரடித்துக்கொண்டு
அழுகிறாள்
அரற்றுகிறாள்;
கண்ணீரால் கணவன் உடலைக்
குளிப்பாட்டுகிறாள்!



ஒருதாய்
தன் உயிரிலே கூடுகட்டி வளர்த்த
குழந்தையை இழந்து விடுகிறாள்
துடிக்கிறாள்!
துவள்கிறாள்!

கணவனை இழந்த காரிகை
கணவனோடே கல்லறையாகி விடுவதுமில்லை;
சேயை இழந்த தாய்
செத்துப் போவதுமில்லை!

இறந்துபோன நாளில் இருந்த
துன்பத்தின் தாக்குதல்
இதயத்தில் அடித்த
அந்தத் தாங்கஒண்ணா சம்மட்டி அடி
இரண்டாவது நாள் கொஞ்சம் குறைகிறது!

மூன்று நாட்கள் நான்கு நாட்கள் என்று
காலத்தின் கால்கள் ஓடுகின்றன;
நிற்காமல் ஓடுகின்றன!
முதல்நாள் இருந்த துன்பத்தின் ஆழம்
அழுகை அரற்றல்
ஒருவாரத்தில் - பத்து நாட்களில்
கொஞ்சம் கொஞ்சமாகக் குறைகிறது!



அப்பொழுது விரக்தியோடு
ஒப்புக்காகச் சிரிக்கின்ற சிரிப்பு
இன்னும் சில நாட்களில்
இயல்பான சிரிப்பாக மாறிவிடுகிறது.

ஒரு மூன்று நான்கு மாதத்தில்,
அல்லது ஆறு மாதத்தில்,
ஓராண்டில்

மீண்டும் பழைய நிலைக்குத் திரும்பி
இயற்கையான கலகலப்பான வாழ்க்கைக்கு
வந்து விடுகிறார்கள்.

இப்போது மட்டும் என்ன;
மாண்டவர்கள் மீண்டவர்களாகவா
மாறிவிட்டார்கள்?
இல்லை
இறப்பினால் இழப்பினால் ஏற்பட்ட துன்பம்
அவ்வப்போது தலைகாட்டினாலும்
தொடர்ந்து அந்தத் துன்ப நினைவுகள்
வடிந்து கொண்டிருக்கவில்லை

காலம் துன்பத்திற்கு
நினைவு உறைதல் மறதி என்னும்
மருந்து தடவிவிட்டிருக்கிறது

மனத்தின் ரணங்கள் இப்போது
லேசான தழும்புகளாகத் தெரிகின்றன.
உடலில் காயம்பட்டு
ஒழுகிய இரத்தம்
உறைந்து போகாமல்
தொடர்ந்து வடிந்தாலும்
உலகம் சூனியமாகிவிடும்;
உள்ளத்தில் ஏற்பட்ட காயங்களிலிருந்து
துன்ப நினைவுகள் தொடர்ந்து
வடிந்துகொண்டிருந்தாலும்
சூனியமாகிவிடும்!



இரத்த உறைதல் உடலைக் காத்து
அதன் மூலம்
உயிரைக் காக்கிறது;
நினைவு உறைதல்
உள்ளத்தைக் காத்து அதன்வழி
உயிரைக் காக்கிறது!

நினைவு
மொழியை உண்டாக்கியது
இலக்கியத்தைத் தந்தது
விஞ்ஞானத்தைக் கண்டுபிடித்தது
மனித சமுதாயத்தின் எல்லா வளர்ச்சிக்கும்
காரணமாய் அமைந்தது என்றால்



மறதி
இவற்றை எல்லாம் உருவாக்கிய
மனித சமுதாயம் பூண்டற்றுப் போகாமல்
சூனியமாகிவிடாமல் காத்து வந்திருக்கிறது
நினைவல்ல ஆற்றல்!
செல்வம்!
மறதிதான் ஆற்றல் !
செல்வம்!
காலமகளின்
கைவைத்தியம் மறதி.



# பணம்

“எட்டுத் தலைமுறைக்குச்
சம்பாதித்து வைத்துக் கொண்டிருக்கிறான்
அவனுக்கென்ன கவலை”
இப்படி ஒரு சிலரைப்பற்றி
ஊரும் உலகமும் சொல்வதை
நானும் அடிக்கடி
கேட்டுக்கொண்டுதான் இருக்கிறேன்.



அப்படிக் கேட்கும்போதெல்லாம்
சொல்கிறவர்களின் அறியாமையை
நினைத்துச் சிரித்திருக்கிறேன்.
அப்படிச் சொல்வதில்
எல்லாச் சொல்லும்
உண்மையும் இல்லை;
அர்த்தமுள்ளதும் இல்லை!

சேர்த்துக் கொண்டிருக்கிறான்
என்ற தொடர் ஒன்று மட்டும்தான் உண்மை!
எட்டுத் தலைமுறைக்கு
என்பது தலைமுறைக்கு
என்பதெல்லாம் பொய்!
கற்பனை!!

அவனுக்கென்ன கவலை
என்ற வினாப்பொருள் உணர்த்துகிற
கவலை இல்லை என்பது தவறு

ஒன்று
அந்தப்பணம்
இந்தத் தலைமுறையிலேயே
இழந்துவிடக் கூடியதாகவும் இருக்கலாம்!

இரண்டு
அந்தப் பணமே கவலைக்கு
காரணமாகக்கூட
இருந்துவிடலாம்!

பணம்
நமக்கு ஏவல் செய்ய வேண்டியது
நம்மைக் காவல் காக்க வேண்டியது
அது
நம்முடைய கட்டளையைக் கேட்டு
நம்மைக் காக்கிறவரைதான்
நாம் வாழ்வதாகப் பொருள்!



அப்படி இல்லாமல்
பணம் சொல்கிறபடி
நாம் ஏவல் செய்து
அதைக் காவல் காக்கும் நிலைமை
வந்து விடும்போது;

பணத்தை வாழச் செய்வதற்காக-
பணத்தைக் காப்பதற்காக-
நாம் வாழும்போதே
செத்துப்போகிறோம் என்பதுதான் உண்மை!

அடுத்தவேளை சோற்றுக்கு வழியில்லாமல்
ஏதோ கிடைத்ததைத் தின்றுவிட்டு
ஒரு வீட்டுத் திண்ணையில்
படுத்துத்தூங்கும்போது
எந்தப் பயமும் இருப்பதில்லை;
நிம்மதியாகத் தூங்கி விடுகிறோம்!

ஆனால்
ஒரு பத்தாயிரம் ரூபாய் வீட்டில் இருந்தால்
எல்லாக் கதவுகளையும் சாத்தி
தாழிட்டுவிட்டு
வீட்டுக்குள்ளே படுத்திருக்கிறவனுக்கு
அமைதியாகத் தூங்க இயலவில்லை.



பத்தாயிரம் என்பது
இலட்சம் பத்து லட்சம் என்று வளரவளர
மனிதனின் நித்திரையும் குறைகிறது
நிம்மதியும் குறைகிறது

புதையலைக் காக்கும் பூதங்கள் என்பார்களே;
அப்படி பணம் வைத்துள்ள
பெட்டிக்குக் காவல் இருக்கும்
பேயாக மனிதன் மாறிப்போகிறான்!

அடிப்படைத் தேவைகளைத் தீர்த்துக்கொள்ள
நிறைவேற்றிக்கொள்ள
ஓரளவு போதும் என்கிற நிலையில்
பணம் இருக்கிறவரை
பணம் மனிதனுக்கு மருந்து.

அளவுக்குமேலே சேர்ந்துவிட்டபின்னால்
அந்தப் பணமும் நோய்!
இந்தப் பணம்
தூக்கத்தையும் கெடுக்கிறது;
பசியையும் கெடுக்கிறது!
இது நோய் இல்லாமல் வேறென்ன?

உலர்ந்துகிடக்கும்
ஒரு துணியை நனைக்கிறோம்;
அது எந்த அளவுக்குத் தண்ணீரை
ஈர்த்துக்கொள்ள இயலுமோ
அந்த அளவுக்குத்தான்
ஈர்த்துக்கொள்கிறது!



அதற்குமேல்
கரைபுரண்டு வரும்
ஆற்றுத் தண்ணீரிலேயே மூழ்கிக் கிடந்தாலும்
அது ஈர்த்துக்கொள்வதில்லை.

அப்படி அளவோடு
பொருளைச் சேர்த்துக்கொண்டு வாழ
மனிதனால் முடியவில்லை;
மனம் இடம் கொடுப்பதில்லை!

அப்படியாவது
ஒரு தலைமுறைக்கு
எட்டுத் தலைமுறைக்கு
என்று சேர்த்து வைக்கிற பணம்
அந்த நோக்கத்தை நிறைவேற்றுகிறதா என்றால்
அதுவும் இல்லை.

ஆயிரத்தில் இலட்சத்தில்
ஒரு குடும்பத்தில்
பரம்பரைச் சொத்து
பயனளிக்கிறதே அல்லாமல்
எல்லாக் குடும்பங்களுக்கும் பயன்படுவதில்லை

நான்
பேருந்துக்குக் காசில்லாமல்
நடந்துபோய்க் கொண்டிருந்த காலத்தில்
காரில் போய்க்கொண்டிருந்தவன்,
இன்று
கால்நடையாகப் போய்க்கொண்டிருக்கிறான்!
நான் காரில் போய்க்கொண்டிருக்கிறேன்!



கட்டிய வீட்டை ஒருவன்
காலி செய்துவிட்டுப் போய்க்கொண்டிருக்கிறான்!
அந்த வீட்டில்
வாடகைக்குக் குடியிருந்தவன்
அந்த வீட்டை வாங்கிக்கொண்டு வாழ்கிறான்!

அப்பன்
ஊருக்கெல்லாம் சோறு போட்டான்!
பிள்ளை
ஊரெல்லாம் யார் சோறு போடுவார்களென்று
அலைந்துக் கொண்டிருக்கிறான்!

ஏழ்மையும் வறுமையும் இருக்கிறவரை
பங்குவைத்துக்கொள்ள
சொத்து, சுகம், மாடு, மனை,
தோட்டம், துரவு என்று
எதுவும் இல்லாமல் இருக்கிறவரை
ஒரு குடும்பத்தில்
பாசமும் நேசமும்
பங்கு வைத்துக்கொள்ளப்படுகிறது.



இரண்டு பேர்
பணத்தை பங்குவைத்தால்
பாதி பாதி ஆகும்!
பாசத்தைப் பங்கு வைத்தால்
ஒன்று இரண்டாகும்!

பாசத்தையும் நேசத்தையும்
பங்கு வைத்துக்கொண்டிருந்த குடும்பத்தில்
பங்கு வைப்பதற்குப்
பணம் வந்துவிடும்போது
இந்த மானுட உயிருக்கு
உரமிட்டு நீர்ப்பாய்ச்சும்
பாசமும் வற்றிப்போகிறது!
நேசமும் பட்டுப்போகிறது!

மனிதன்
பணம் இல்லாதவனாக இருக்கும்வரை
நல்லவனாக இருக்கிறான்!
இருப்பவனாக மாறிவிட்ட பின்னால்
இல்லாதவனாக (பண்பு)
மாறிவிடுகிறான்!

ஒரு சின்ன வெடிகுண்டு
ஒரு பெரிய மாடமாளிகையை
தரை மட்டமாக்கிவிடுகிறது;
ஒரு தீய பண்பு ஒழுக்கக்கேடு
மலையளவு செல்வத்தைத்
தாக்கித் தகர்த்து
தரைமட்டம் ஆக்கிவிடுகிறது!

நான் பார்க்கிறேன்
பெரும்பாலும்
பணக்கார வீட்டுப் பிள்ளைகள்
பிள்ளைகளாக இருப்பதில்லை;
கொள்ளிகளாகத்தான் இருக்கிறார்கள்!



எத்தனை தந்தைகள்
அவர்கள் வாழ்க்கையை விற்று
வாங்கிக்கொண்ட செல்வத்தைச்
சேர்த்து வைத்ததனாலேயே
அவர்கள் சேர்த்து வைத்த
செல்வத்தினாலேயே சிறுகச் சிறுக

செத்துக் கொண்டிருக்கிறார்கள்;
தவணைமுறையில் தற்கொலை
செய்துகொண்டிருக்கிறார்கள்;
என்பது யாருக்குத் தெரியும்!

பணம் என்கிற லாகிரி,
கஞ்சா, அபின் என்று சொல்லப்படும்
எல்லாவற்றையும்விட மோசமானது
அது மெல்லக் கொல்லும் விஷம்!

சினமும் ஒன்றுதான்;
பணமும் ஒன்றுதான்;
இரண்டுமே
சேர்ந்தோரைக் சொல்லுவதுதான்!

பணம்
அறிவுச் சாளரங்களை அடைத்துவிடுவது;
ஆணவத்திற்கும் அகம்பாவத்திற்கும்
இதுதான் கருவறை!



விதிவிலக்காக பணம் இருப்பவர்கள்
ஒரு சிலர் இருக்கலாம்
இலட்சத்தில் ஒருவராக!

பணக்கார வீட்டுப் பிள்ளைகளுக்குள்ளே
பகை இருக்கும்;
பாசம் இருக்காது!

வறுமை உழைக்கச்செய்கிறது.
முயற்சிக்கு வித்திடுகிறது!
உழைப்புக்கும் முயற்சிக்கும்
உந்து சக்தியே
இல்லாமைதான்;
ஏழ்மைதான்.

படுக்கையறையும் ஒன்றுதான்;
சமையலறையும் ஒன்றுதான்;
எல்லா அறையும்
இருக்கும் வீட்டில் உள்ள
ஒன்றே ஒன்றுதான்
என்று வாழ்ந்து கொண்டிருக்கிறவரை
அந்தக் குடும்பத்தில்
இருக்கும் எல்லோருமே
ஒன்றாகக் கலந்து வாழ்கிறார்கள்!



ஆளுக்கொரு படுக்கையறை;
ஆளுக்கொரு கார்;
ஆளுக்கொரு வசதி என்று
வந்து விடும்போது
அந்த ஒரு குடும்பம்
ஒன்பது குடும்பமாக
ஒருவருக்கொருவர் சம்பந்தம் இல்லாத
அன்னியர்கள் போல ஆகிவிடுகிறார்கள்!
வீடு, வீடாக இல்லாமல்
விடுதியைப் போல மாறிவிடுகிறது!

காலை முதல் பட்டினி கிடந்துவிட்டு
மாலையில் காய்ச்சிய
கஞ்சியை ஏழைக்
குடும்பத்தில் உள்ள
நான்கைந்துபேர்
பங்குப்போட்டுக் குடிக்கும்போது
அந்தக் குடும்பத்தில் ஏற்படுகிற
மகிழ்ச்சியும் நெகிழ்ச்சியும்
மாளிகை வாசலை
எட்டிக்கூடப் பார்ப்பதில்லை!

அடுத்த ஜென்மம் என
ஒன்று இருந்தால்
நான் கல்லுடைக்கிறவனாகவோ;
காடுவெட்டுகிறவனாகவோ;
பிறக்கவேண்டும்!
அவனுக்குக் கட்டாந்தரையில்
படுத்தாலும் தூக்கம் வருகிறது!
கல்லைத் தின்றாலும்
ஜீரணம் ஆகிறது!



தூக்கத்திற்கு ஒரு மாத்திரையும்
ஜீரணத்திற்கு ஒரு மாத்திரையும்
தேவைப்படுவதைப்போன்ற
வறுமை
உலகத்தில் இல்லை!

உணவுக்குத் தேவை
உப்புக்கல்தான்;
வைரக்கல் அல்ல!
உப்புக்கல் வாங்குவதற்குப்
பணத்தைத் தருவதை விட்டுவிட்டு
வைரக்கல் வாங்குவதற்காகப்
பணம் தேடி அலைகிறோம்;
வாழ்க்கையைத் தொலைத்துவிட்டு
நிற்கிறோம்!





# துன்பம்

ஆசையைத் துறந்துவிட்டவனுக்கு
மண்ணும் ஒன்றுதான்;
பொன்னும் ஒன்றுதான்;
மாளிகையும் ஒன்றுதான்;
மரநிழலும் ஒன்றுதான்!

கண்ணாடிச் சில்லும்
வைரக் கல்லும்
வெவ்வேறு என்று
துறவியும் கருதுவதில்லை;
குழந்தையும் நினைப்பதில்லை!



அனாதைப் பிணமாகச்
செத்துப்போன தன் அன்னை
செத்துப்போய்விட்டாள் என்பதைக்கூட
அறிந்துகொள்ள முடியாமல்
அவளது மார்பகத்தில்
வாய்வைத்துப் பால்குடித்த
குழந்தையை நான் பார்த்திருக்கிறேன்.

ஒன்றும் அறியாத
அந்தக் குழந்தைக்கு
தன் தாயின்
சாவும் தெரியவில்லை;
சாவின் துயரமும் புரியவில்லை.

அன்னையின் சாவு துன்பம்!
துன்பத்திலும் கொடிய துன்பம்!
அந்தத் துன்பம்
அந்த இளங்கொழுந்தின்
இதயத்தைத் தீண்டவேயில்லை.

பாலுக்காக வேண்டுமானால்
அந்தக் குழந்தைக்கு அழத்தெரியுமேதவிர
பால் கொடுத்த தாயின்
சாவுக்கு அழத் தெரிவதில்லை.
சாவும் துன்பமும்
குழந்தைக்கு எங்கே தெரியும்?



அந்தப் பிஞ்சுக் குழந்தையின்
நெஞ்சில் இருந்த
அறியாமைதான் துன்பத்தையே
அதன் கண்களுக்குத் தெரியாமல்
மறைத்து வைத்தது.

ஒன்றுமே அறியாத
குழந்தைக்கும் துன்பமில்லை;

எல்லாம் அறிந்த
ஞானிக்கும் துன்பமில்லை.
மண்ணையும், பொன்னையும்
ஒன்றாகவே
பார்க்கின்ற கண்ணுக்கு
இன்பமும், துன்பமும் வெவ்வேறாக
எப்படித் தெரியும்?

நாம் எல்லோரும்
ஒன்றுமே அறியாத
குழந்தைகளாகவும் இல்லை;
எல்லாமும் அறிந்த
ஞானிகளாகவும்இல்லை.
அதனால்தான்
துன்பத்தை உணரும் துன்பம்!
அக்கினி நட்சத்திர வெயிலையே
நிலாக்காய்வதாக நினைக்கிற
நெஞ்சமும் உண்டு!



ஏ.சி. அறைக்குள்ளே
இருந்துகொண்டு
எரிமலைக்குள்ளே
இருப்பதைப்போல எண்ணிப்
புழுங்கிச் சாகிற இதயமும்
இருக்கிறது.

இன்பமும் துன்பமும்
உணரப்படுபவையே தவிர

வேறொன்றும் இல்லை.
ஒரு வீட்டில்
சாவுத்துன்பம் ஏற்படுகிறபோது
அந்த வீட்டின் துன்பம்
அடுத்த வீட்டில் இல்லை.

ஒரே குடும்பத்தில்
அண்ணன் தம்பிகளாக
இரண்டு மூன்று பேர் இருக்கிறார்கள்;
இரண்டு மூன்றுபேரும்
திருமணமாகிக்
குழந்தையும் பெற்றவர்கள்;

அவர்களில்
ஒருவன் தன் குழந்தையை
சாவுக்குத் தத்துக்கொடுத்துவிட்டு
அந்தச் சாவுத்துன்பத்தின்
சம்மட்டி அடியைத்
தாங்கிக்கொள்ள முடியாமல்
தவிக்கிறான்! துடிக்கிறான்!



அவனுக்கிருந்த
தவிப்பும் துடிப்பும் அவனோடு
பிறந்தவர்களுக்குக்கூட இல்லை.
தன் குழந்தை வேறல்ல;
அவன் குழந்தை வேறல்ல;
என்று கருதத்தக்க

உறவும் உரிமையும் உள்ள
ஒருதாய் வயிற்றுப்
பிள்ளைகளுக்குள்ளேயே
உணரும் உணர்வு
வேறுபட்டுத்தான் நிற்கிறது!

குழந்தையைப் பெற்று
இழந்தவனுக்கு ஏற்பட்ட
பாதிப்பு, கூடப்பிறந்தவனுக்கு
இருக்க நியாயம் இல்லை.



இந்த வாழ்க்கை என்பது
இன்பங்களைக் கனவிலேயும்
துன்பங்களை நனவிலேயும்
சுமந்து செல்லும்
ஓர் இனம்புரியாத வழிப்பயணம்!
நாளை இன்பம் வரும்
என்று நம்பி
இன்றைய துன்பத்தைச் சுமந்து
நடந்துகொண்டிருக்கிறோம்!

இன்பம் வரும் என்று
எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்ற
மனிதனுக்கு எதிர்பாராத துன்பம்
முந்திக்கொண்டு வருகிறது!
இன்பம் பெட்டியிலே
போடப்பட்ட கடிதம்;

துன்பம் தந்தியிலே
வருகின்ற செய்தி!

இன்பமும் துன்பமும்
வாழ்க்கை நாணயத்தின்
இரண்டு பக்கங்கள்.
ஜீவித நதியின்
இரண்டு கரைகள்

இன்பம் என்பது
போதை மாத்திரை!
இதயத்திற்குள் போடப்படுகிற
பெதட்டின் ஊசி!
அது மயக்கத்தைத் தருகிறது;
உண்மை என்ன
உலகம் என்ன என்று தெரியாமல்
கண்களுக்கு
திரை போட்டு வைக்கிறது!



குளியல் அறையில்
வெந்நீரில் குளித்துக்கொண்டிருக்கும்போது
முகம் பார்க்கும் கண்ணாடியில்
நீராவி படிந்து
கண்ணாடியில் பூசப்பட்டுள்ள
பாதரசத்திற்குப் பயன் இல்லாமல்
செய்துவிடுவதுபோல
இந்த இன்பமும்

உலகத்தை அறிந்துகொள்ளும்
ஞானரசத்தின் பயனை
மனிதனுக்குக்
கிடைக்காமல் செய்துவிடுகிறது.

இன்பத்தையே
எண்ணிக்கொண்டிருக்கிறவனுக்கு
இன்பத்திலேயே
மிதந்து கொண்டிருக்கிறவனுக்கு
அறிவு என்னும்
ஆலய வாசலின் கதவுகள்
என்றுமே திறப்பதில்லை.



உலகத்தின்
ஞானாசிரியர்கள் எல்லாருமே
துன்பத்தின் மாணாக்கர்கள்தாம்!
துன்பம் நெருப்பு
நெருப்பிலே துருப்பிடிப்பதில்லை!
மாசு படிவதில்லை!
அறிவுத் திருக்கோயிலின்
திறவுகோல் இந்தத் துன்பம்தான்!



# முள்

இவன் மிகவும் நல்லவன்;
என்ன பேசினாலும்
எதிர்த்துப் பேச மாட்டான்;
என்ன செய்தாலும்
எதிர்த்தும் செய்ய மாட்டான்;
நல்லவன் என்பதற்கு
மனித சமுதாயம் கற்பித்திருக்கும்
இலக்கணம் இது.

இவன் மிகவும் பொல்லாதவன்;
என்ன சொன்னாலும்
எதிர்வாதம் செய்வான்;
என்ன செய்தாலும்
எதிரும் புதிருமாக செய்வான்;
மட்டு மரியாதை தெரியாது;
கெட்டவனுக்குரிய
சமுதாய இலக்கணம் இது.



நல்லவன் கெட்டவன்
இப்படித்தான்
இந்தச் சமுதாயச் சபையில்
தீர்மானிக்கப்படுகிறார்கள்!

தான் பேசுவதோ
தான் செய்வதோ
எவ்வளவுதான் நியாயத்துக்குப்
புறம்பானதாக இருந்தாலும்
அதை ஏன் என்று
எவன் கேட்கவில்லையோ
அவனைத்தான் நல்லவன் என்று
ஒப்புக்கொள்கிறார்கள்.

நந்தவனத்தில்
நடந்து போய்க் கொண்டிருக்கிறோம்;
எத்தனையோ மலர்கள்
கீழே உதிரிகளாய் கிடக்கின்றன.
எத்தனையோ மனிதர்களின்
காலடியில் சிக்கி மிதிபட்டு
கசங்கி போகின்றன.



அந்த மலர்கள்
நம் கண்ணுக்கு நல்லவை:
மென்மையானவை:
வலிவற்றவை
எப்படித்தான் மிதித்தாலும்
நம்மை காயம் செய்வதில்லை

'ஏன்' என்று
ஒரு வார்த்தை எதிர்த்துப் பேசாத
வாயில்லாப் பூச்சிகளைப்போல

இந்த மலர்கள்!
அதனால்
மலர்கள் நல்லவை.

அந்தக் காலத்தில் மன்னர்களுக்கும் சரி
இந்தக் காலத்தில் பெரும்பதவியில்
இருப்பவர்களுக்கும் சரி
இந்த மலர்களைத் தூவித்தான்
வரவேற்பே அளிக்கப்பட்டது!
அளிக்கப்படுகிறது.



மனிதர்களின் காலடி பட்டுக்
கசங்கிச் சாகிற மலர்கள்
'யார்?' எதைச் செய்தாலும்
'ஏன்' என்று கேட்காமல்
குட்டக் குட்டக்
குனிந்து கிடக்கும்
விசுவாசமான கொத்தடிமை
இனத்தைச் சேர்ந்தவை!

அதனால்
அந்த மலர்கள் நல்லவை!
நந்தவனத்தில் இவர்களின்
காலடிபட்டு மரண தண்டனைக்கும்
சித்திரவதைக் கொடுமைக்கும்
ஆளாகும் மலர்களைப் பற்றி
ஈவு இரக்கம் இல்லாத

இந்த மனிதர்கள்
எந்த விதமான எச்சரிக்கையும்
இல்லாமல் நடக்கிறார்கள்!

ஆனால்
கள்ளி முள்ளும்
நெருஞ்சி முள்ளும்
மண்டிக் கிடக்கின்ற காடுகளில்
மிகவும் எச்சரிக்கையாக
நடக்கிறார்கள்;
பயந்து பயந்து நடக்கிறார்கள்!



காரணம்,
எப்படித்தான் ஏறி மிதித்தாலும்
ஏன் என்று கேட்காத
ஏழை மலர்களை
போன்றவை அல்ல
இந்த முட்கள்!

எந்தக் கால் மிதிக்கிறதோ
அந்தக் காலை இந்த முட்கள்
பதம் பார்க்காமல் விடுவதில்லை!
குத்திக் காயம் செய்யும்;
இரத்தம் கசியச் செய்யும்!

ஒரு செயலுக்கு
எதிர்செயல் என்று

இந்த முட்கள் செய்வதால்
முட்கள் கொடியவை;
பொல்லாதவை!

காலடி பட்டுச்
சத்தம் இல்லாமல்
செத்துப்போகும்
மலரைப் போல்
இந்த முள்
இருப்பதில்லை!



முள் கெட்டது என்பதற்கு
இந்த மனிதர்களுக்கு
இதைக் காட்டிலும் காரணம்
வேறென்ன வேண்டும்!

'வழியில் முள் கிடக்கும்
பார்த்துச் செல்லுங்கள்!'
என்று எச்சரிக்கை செய்கிற மனிதர்கள்
'வழியில் மலர் கிடக்கும்
பார்த்துச் செல்லுங்கள்'
என்று என்றேனும் எங்கேனும்
சொல்லக் கேட்டதுண்டா?
முள் என்றதுமே
எச்சரிக்கை உணர்வு
பிறக்கிறது!

எனக்கென்னவோ
மணமுள்ள
மென்மையான
வண்ண வண்ணமான
மலர்கள் மீதுள்ள
மரியாதையைக் காட்டிலும்
இந்த முட்கள் மீதுதான்
மரியாதை அதிகம்!

மலர்கள் அனுதாபத்துக்குரியவை!
ஆனால்
முட்கள் மரியாதைக்குரியவை.
இந்த முள்ளை
பின் விளைவுகள் பற்றிக்
கவலைப்படாமல் ஆதிக்கவாதிகளுக்கு
எதிராகப் போரிடும்
போர்க்குணம் கொண்ட
மனிதர்களோடு
ஒப்பிட்டுப் பார்க்கிறேன்!



போர்க்குணம் கொண்ட
மனிதனாவது ஆயுதங்களிடம்
அடைக்கலம் புகுகிறான்
ஆனால்
என் மரியாதைக்குரிய
இந்த முள்
ஆயுதமாகவே பிறந்திருப்பதை
எண்ணிப் பார்க்கிறேன்

இந்த முள்தான்
ஒரு பன்றியின் உடம்பில்
பாதுகாப்புப் படையே
அமைத்திருக்கிறது!
பலாப் பழத்திலும்கூட
முட்கவசம் இருக்கிறது

கம்புக் காட்டுக்கு
வேலி போடுகிறோம்;
கள்ளிக் காட்டுக்கு
வேலி போடுகிறோமா?
தம்மைத் தாமே
பாதுகாத்துக் கொள்ளும்
திறம் இல்லாதவர்களுக்குத்தான்
வேறொரு பாதுகாப்புத்தேவை.



தம்மைத்தாம் பாதுகாத்துக்கொள்ளும்
வலிமை உள்ளவர்களுக்கு
வேறு பாதுகாப்பு எதற்கு?
காத்துக்கொள்ளும் வலிமையற்ற
மலர்த்தோட்டத்துக்கு
முள் காவல் இருக்கிறது;
தன்னையும் தானே
அது காத்துக்கொள்கிறது.
ஆனாலும்
மலருக்குள்ள மரியாதை
முள்ளுக்கு இல்லை!

இந்த மனிதர்களின் அகராதியில்
நல்லவை என்பதற்குள்ள பொருளே
ஏமாந்தவை
எடுப்பார் கைப்பிள்ளை;
போன்றவை
எப்படித்தான் ஏறி மிதித்தாலும்
ஏன் என்று கேட்காதவை
என்பதாகவே இருக்கிறது.

நல்லவன் என்பதற்கும்
இப்படித்தான் இலக்கணம்!
மனிதனுக்கு அஞ்சி அஞ்சி
ஓடுகின்ற மான்கள் நல்லவை!
எதிர்த்துத் தாக்குகிற வேங்கை
விபரீதமானது;
கொடியது!



பிள்ளைப் பூச்சி நல்லது;
தேள் பொல்லாதது!
அப்படித்தான்
மலர் நல்லது;
முள் தீயது;
கெட்டது.

இந்த மனிதன்
நல்லது கெட்டது
நல்லவன் கெட்டவன்
என்று தன்னை வைத்தே
முடிவு செய்கிறான்!

திசைகளைக்கூடதான் இருக்கும்
இடத்துக்கு ஏற்பத்தானே
பெயரிட்டழைக்கிறான்!
உண்மையில் பார்த்தால்
எல்லாத்திசையும்
ஒரே திசைதான்!

உருண்டையாக இருக்கும்
உலகத்தில்
தெற்கேது? வடக்கேது?
கிழக்கேது? மேற்கேது?
எல்லாம் தெற்குத்தான்!
எல்லாம் வடக்குத்தான்!
கிழக்கும் மேற்கும் அப்படித்தான்!

இந்த நல்லது கெட்டது
நல்லவன் கெட்டவன்
என்பதும் அப்படித்தான்!
பறித்தாலும் மிதித்தாலும்
மலர் எதுவும் செய்வதில்லை;
மலர் நல்லது.



முள் எதிர்வினை கொண்டது
அதனால்
அது கெட்டது.
தன்னலம் மிக்க
மனிதர்களின் பார்வையில்
இப்படித்தான் படும்!

எதுவும் செய்யலாம் என்று
எல்லோரின் அலட்சியத்திற்கும்
ஆளாகிய
இந்த மலரைக் காட்டிலும்
எச்சரிக்கை செய்கிற
முள் சிறந்தது! உயர்ந்தது!

ஆதிக்கக் கால்களில்
மிதிபட்டுச் சத்தம் இல்லாமல்
செத்துப்போகிற
மலர்போல வாழ்ந்து
நல்லவன் என்று பேர்
எடுப்பதைக் காட்டிலும்,



மிதிக்கிற காலைக்
குத்திக் காயப் படுத்துகிற
முள்ளைப்போல்
கெட்டவன் என்றாலும்
ஒரு போர்க்குணம் கொண்டவனாக
நான் இருக்க விரும்புகிறேன்!

எனது பார்வையில்
மலர் பாவம்!
அனுதாபத்திற்குரியது!
ஆனால்
முள்ளோ மரியாதைக்குரியது.

# அந்த
# எல்.ஐ.சி. கட்டடம்!

சென்னைக்கு
வெளியூர்களில் இருந்து
சுற்றுலா வருகிறவர்கள்
வியந்து பார்க்கிற இடங்கள்
பல இருக்கின்றன.

ஆனால்
பாமரத்தனமாக
அண்ணாந்து பார்த்து
ஆச்சரியப்படும் இடமாக
அமைந்திருந்தது
அந்த எல்.ஐ.சி. கட்டடம்!



சென்னைக்கு நானும்
முதல் முதலாக வந்தபோது
என் விழிகளையும்
அந்த வியப்பு விரிய
வைத்ததுண்டு.

மயன் செய்த மாளிகை
என்பார்களே;
அப்படிப்
பதினான்கு அடுக்குகளோடு
நிமிர்ந்து நிற்கும்
அந்தக் கட்டடத்தைப் பார்த்து
நானும் மருண்டுபோய்
நின்றிருக்கிறேன்!

தொடக்கத்தில் இது
என் விழிகளை வியப்பால்
விரிய வைத்தாலும்,
சிந்திக்க ஆரம்பித்த பின்னால்
வியப்பு விடைபெற்றுக்கொண்டு
வேதனைதான் மனதில்
குடிபெற ஆரம்பித்தது.



அந்த உயர்ந்த கட்டடத்தைப்
பார்க்கும் போதெல்லாம்
இந்தச் சமுதாயம்
எவ்வளவு தாழ்ந்து கிடக்கிறது!
என்ற எண்ணம்தான்
என் இதயத்தில்
மேலோங்கி நின்றது!

ஒரு சுதந்திர நாட்டில்
மக்கள் வாழ்க்கைக்கு
உத்தரவாதம் அளிக்க

கையாலாகாத ஓர் அரசாங்கமும்,
நாளைய வாழ்க்கைப்பற்றிய
நம்பிக்கை இல்லாத
ஒரு பதுகாப்பாற்ற
பரிதாபமான சமுதாயமும்
இருப்பதன் அடையாளம்
இன்னும் தான்
அப்படி உயர்ந்து நின்று
இந்த உலகத்திற்குச்
சாட்சி சொல்லிக் கொண்டிருக்கிறது!
இதைத்தான் நான் புரிந்து
கொண்டேன்!



நீங்கள் உங்கள்
எதிர்காலம் நலமாய்
இருக்கவேண்டும் என்று விரும்பினால்,
உழைத்துச் சம்பாதிக்கும்போதே
சேமித்து வைத்துக்கொள்ளவேண்டும்
இல்லையென்றால்
தெருவில்தான் நிற்க வேண்டும்;
பிச்சைதான் எடுக்க வேண்டும்;
அனாதை ஆசிரமத்துக்கு
மனுதான் போடவேண்டும்!

'நான் பொறுப்பல்ல,'
என்று தனது பொறுப்பைத்
தட்டி கழிக்கும் ஒரு கையாலாகாத

அரசாங்கத்தின் ஆண்மைக்
குறைவைத்தான்
இந்த அறிவிப்பு
எனக்கு அடையாளம் காட்டுகிறது!

தொலைக்காட்சி
என்று ஒரு கருவி இருக்கிறது.
இந்த நாட்டுக்குத் தேவையில்லாதது
அதைத் 'தூர்தர்ஷன்' என்கிறார்கள்!
அது தூர்தர்ஷன் அல்ல
'துரதிர்ஷ்டம்'

அதில் டி.என்.எஸ்.சி. வங்கியின்
விளம்பரம் பார்க்கிற போதெல்லாம்
எனக்கு எரிச்சலாக இருக்கிறது!



'உன் சக்திக்கேற்றபடி
வர்க்கம் இல்லாமல் நீ உழை!
உன் வாழ்க்கையில்
எதிர்காலப் பாதுகாப்பை
நான் பார்த்துக்கொள்கிறேன்'
என்று எந்த அரசாங்கம்
சொல்கிறதோ
அதுதான் மக்கள்
அரசாங்கமாக இருக்கமுடியும்!

உழைப்பு உன்னுடையது;
உன் எதிர்கால வாழ்க்கைக்கான

உத்தரவாதம் என்னுடையது
என்று சொல்லும் வீரியம் மிக்க
அரசாங்கம்
இந்த நாட்டில்
கி.பி. இரண்டாயிரத்துக்குப்
பின்னும் வருமா?
என்பது சந்தேகம்தான்!

சேமிக்கத் தேவையே
இல்லாத சமுதாயம்தான்
செழிப்பான சமுதாயம்!
நோய் அற்ற சமுதாயம்!
அப்படிப்பட்ட சமுதாய அமைப்பை
உருவாக்கும் அரசாங்கம்தான்
மெய்யான அரசாங்கம்!

சேமிக்க வேண்டிய நெருக்கடி
எப்போது வருகிறதோ-
அப்போதே
இலஞ்சம், ஊழல்
திருட்டு, கொள்ளை,
மோசடி, ஏமாற்றுவேலை,
கறுப்புப்பணம், கள்ளநோட்டு
இவை எல்லாமும்
இந்த நாட்டை
மேய்ச்சல் நிலமாக்கி கொள்ளும்!
குத்தகைக்கு எடுத்துக்கொள்ளும்!



வானத்துக்குக்கூட
எல்லை வரம்பு இருக்கலாம்!
ஆனால்,
வாழ்க்கையில்
சேமிப்புக்கு மட்டும்
எல்லை இல்லை;
இருக்க முடியாது!

இப்படி
எல்லையே இல்லாத
சேமிப்பு முறைதான்
இந்தச் சமுதாயத்தை
இரத்தம் வழிய வழியக்
கிழித்துச் சின்னா பின்னப்
படுத்தி இருக்கிறது!
பலருக்கு வறுமையும்
சிலருக்கு வாழ்க்கையும்
என்ற பேயின் பெற்ற தாயே
இந்தச் சேமிப்பு முறைதான்!



சுதந்தரம் கிடைத்து
(கிடைத்ததாகச் சொல்லிக் கொள்கிறோம்)
நாற்பதாண்டுகள் கழிந்தும்
ஒரிசாவில் பட்டினி!
பலபேருக்குப் பாடை கட்டி
வைத்திருக்கிறது என்பதைப்
பார்க்கிறபோது
இந்தப் பாரதத்தாயின்

உடல் முழுவதும் அக்கினித் திராவக
கங்கை பாய்ந்தால் ஆகாதா
என்றுதான்
என் கவிதாவேசம்
கனன்று கொதிக்கிறது!

ஆழமாகவும் நியாயமாகவும்
சிந்தித்துப் பார்த்தால்!
இவர்கள் செத்துப் போனதற்கு
இந்தச் சேமிப்பு முறைதான்
காரணம் என்று விளங்கும்!

நாட்டில் இன்று இருக்கும்
எல்லாச் செல்வத்தையும்
சமமாகப் பங்கு வைக்க நேர்ந்தால்
ஏழ்மைக்கேடும்
வறுமைக்கோடும்
ஒரே நொடியில்
அழிந்து போகாதா?



இந்தச் சேமிப்பு
இந்த நாட்டு ஏழைமக்கள்
எத்தனை எத்தனை பேர்
சிந்திய இரத்தத்தைக்
கரன்ஸிகளாக மாற்றி
எத்தனை முகமூடி
அணியாத கொள்ளைக்காரர்களை
சமுதாய விரோதிகளை

தேசத் துரோகிகளை
ஸ்விஸ் வங்கியில்
பதுக்கி வைக்கச் செய்திருக்கிறது!

ஒரு சமுதாயத்தின்
எல்லாவிதமான பொருளாதாரச்
சீரழிவுகளுக்கும் இந்தச் சேமிப்பு
முறைதான் ஊற்றுக்கண்!

இந்த எல்.ஐ.சி. கட்டடத்தின்
உயரம்
ஒரு தாழ்ந்த சமுதாயத்தின்
அளவு கோல்!
ஒருமுறை
இந்த எல்.ஐ.சி. கட்டடம்
தீப்பிடித்து
எரிந்து போனதாகும்!



நான் எதிர்பார்ப்பது
அந்தக் கட்டடம்
இருப்பதற்கான காரணம்
முழுவதும் ஒருநாள்
எரிந்து சாம்பலாக வேண்டும்
என்பதுதான்!
அது
பூமித்தாயின் மார்பிலே
விளைந்த புற்றுநோய்!



# இருள்

எனக்குத் தெரிந்த வரை-
இயற்கையின் படைப்பில்
இது நல்லது என்றும் இல்லை;
இது கெட்டது என்றும் இல்லை;
எதுவும் நல்லதுதான்!
எதுவும் கெட்டதுதான்!

அதேபோல
இது தேவையானது
இது தேவையற்றது
என்று ஒன்றும் இல்லை!
தேவை என்றால்-
எதுவும் தேவைதான்!
தேவையில்லை என்றால்
எதுவும் தேவையில்லைதான்!



ஒவ்வொன்றின் தோற்றத்திற்கும்
ஒவ்வொரு காரணம் இருக்கிறது
மலர் என்று சொன்னதுமே
முள்ளும் நினைவுக்கு வருகிறது!
மலை என்று சொன்னதுமே
கடலும் கண்ணில் தெரிகிறது!

உறவென்று சொல்கிற
சொல்லில்
பகை என்ற சொல்லும்
எதிரொலிக்கிறது!

பிறப்பென்கிறபோதே
இறப்பும் முன்னிற்கிறது!
பகல் என்கிற போதே
இரவும் தெரிகிறது.

உலகத்தில் உள்ள
எல்லாப் பொருளுக்கும்
எதிரும் புதிருமாக
வேறொரு பொருள் இருக்கிறது!



ஒன்றுக்கொன்று முரண்பட்ட
இயல்புகளோடு
உலகத்தில் எத்தனையோ
படைப்புக்கள்!

வெயிலும் மழையும்
வெவ்வேறாய் இருக்கலாம்!
முரண்பட்டவையாகக்கூட
இருக்கலாம்!
ஆனால்
வெயில் இல்லாமல்
மழையில்லை!
நனைக்கின்ற மழைக்கு

அடிப்படையே
எரிக்கின்ற வெயில்தான்!
இதைப் புரிந்துகொண்ட பின்னால்
மழையை விரும்புகின்ற எவரும்
வெயிலை வெறுத்துவிட முடியாது!
மழையைப் போற்றுகிறவர்கள்
வெயிலையும்
போற்றித்தான் தீரவேண்டும்!

"பாலை நிலத்தில்
வெயில் உண்டு
மழை உண்டா?" என்றால்
இயற்கையின் படைப்பில் உள்ள
ஓரிரு விதிவிலக்குகளில்
அதுவும் ஒன்று



விடியலையும் பகலையும்
வெளிச்சத்தையும் பாராட்டுகின்றவர்கள்
இருளைப் பாராட்டுவதில்லை!
எழுஞாயிற்றையும்
முழுமதியையும் பாடிய கவிஞர்கள்
இருளைப் பாடவில்லை

மனம் வருந்தி முகம் வாடி
இருக்கும் போது
முகம் இருண்டு
கிடக்கிறது என்கிறோம்!
இருளை

தீண்டத் தகாத ஒன்றாகத்தான்
மனிதன் கருதுகிறான்!
நனைக்கின்ற மழையும்
எரிக்கின்ற வெயிலும்
ஒன்றுதான் என்று கருதுவதில்லை!

அதுபோலத்தான்
பகலையும் இரவையும்
ஒளியையும் இருளையும்
ஒன்றென்று பார்ப்பதில்லை!

இருள்...
உறங்கும் உலகத்திற்கு
வானமகள் போர்த்துவிட்ட
கருப்புப் போர்வை!

சங்கீதத்தில் இராகங்களுக்குக்கூடக்
காலமும் நேரமும் உண்டு.
அதிகாலைக்குப் பூபாளம்!
அந்தி இருட்டுக்கு நீலாம்பரி!



பூபாளம்...
உறங்கும் உலகத்தை எழுப்புவது
நீலாம்பரி...
உறங்காத கண்களை
உறங்கவைக்க தாலாட்டுவது
நீலாம்பரி
தாயின் கனிந்த

இதயத்தில் இருந்து
எழுதுகின்ற கருணை ராகம்!
நீலாம்பரி...
இருளின் நிறமான கரிய ஆடை
அணிந்துவரும் இராக தேவதை!
இருளின் நாத உருவகம்!
தாயின் தாலாட்டுக்கு
இணையான பாட்டு -
கவிதை உலகத்தில் எங்கும்
இல்லை!

ஒரே அறையில்
ஒருவன் ஒளிவிளக்கை எரியவிட்டுப்
படித்துக் கொண்டிருக்கிறான்.
இன்னொருவன்
தூக்கத்தை எதிர்பார்த்து
படுத்துக்கொண்டிருக்கிறான்.
தூங்க நினைப்பவன்
வெளிச்சம் கண்ணை உறுத்துகிறது
விளக்கை அணைத்துவிடு
என்கிறான்.



வெளிச்சம்
கண்ணை உறுத்துவது
தூக்கத்தைத் தடுப்பது!
பசி... தூங்க விடாது
வறுமை... தூங்க விடாது

துன்பம்... தூங்க விடாது
வெளிச்சமும் தூங்க விடுவதில்லை!

நெஞ்சிலே நிம்மதி இருந்தால்
கண்ணிலே தூக்கம்
தானாக வருகிறது!

நிம்மதியும் தூங்க வைக்கிறது
இருளும் தூங்க வைக்கிறது
நிம்மதியில் தூக்கம் வருகிறது
தூக்கத்தில் நிம்மதி வருகிறது!

பகலில் அலைந்து திரிந்து
உழைத்து ஓய்ந்த
மனித சமுதாயத்தை
அமைதியில் துயிலவைக்க
உடலும் உள்ளமும் இழந்துவிட்ட
சக்தியை மீண்டும் பெற
இயற்கை நமக்கு அளித்த பேறு
இந்த 'இருள்'



பகல் வெப்பத்தை
இருள்தான் ஆற்றுகிறது;
மனித குலத்தின்
ஜீவசக்தியைப் புதுப்பிக்க
இயற்கை அன்னை ஊட்டும்
தாய்ப்பால் இந்த இருள்தான்!

விளக்கையும் வெளிச்சத்தையும்
சூரியனையும் சந்திரனையும்
பெருமைப்படுத்த
தன்னைச் சிறுமைப் படுத்திக்கொள்ளும்
இருள் தியாக தேவதை!

அற்பமான மெழுகு வத்திக்குக் கூட
இந்த இருள்தான் மரியாதை
வாங்கிக் கொடுத்தது!
சக்கி முக்கிக் கல்லில் இருந்து
அனல் மின்நிலையம் வரை
வளர்ந்திருக்கின்ற அறிவைத்
தூண்டி விட்டதும்
துலங்கச் செய்ததும்
பகல் அல்ல;
இரவுதான்
ஒளி அல்ல;
இருள்தான்
பகல் - ஒளி - தந்தை
இரவு - இருள் - தாய்!



வானம் போர்த்துவிட்ட
இந்தக் கருப்புப் போர்வையால்தான்
வையம் அழிந்து விடாமல்
தொடர்ந்து வாழும் பேறுபெற்றது!

மரத்தைப் பார்க்கும் கண்கள்
அதன் வேர்களைப் பார்ப்பதில்லை;

பகலையும் ஒளியையும்
பாராட்டுகிற உள்ளங்கள்
இரவையும் இருளையும்
பாராட்டுவதில்லை!



இருள்...
முகக் கண்களைத்தான்
மறைக்கும்!
அகக் கண்களையுமா?

இருள் இனிது
அது உலகத்தைக் குழந்தையாக்கித்
தாலாட்டித் தூங்க வைக்கும் தாய்
இருள் வாழ்க.



# கண்ணீர்த் துளிகள்

கண்களைவிட
சிறந்த ஜீவ நதிகள்...
வற்றாத ஊற்றுக்கள் எவையும்
உலகில் இல்லை



எந்த நதி காய்ந்தாலும்,
எந்த நீர்நிலையில்
தண்ணீர்ப் பஞ்சம்
ஏற்பட்டாலும்,
கண்களில் மட்டும்
கண்ணீர்ப் பஞ்சம்
ஏற்படுவதில்லை.

மனிதனின் உடம்பில் இருக்கும்
எல்லாச் சுரபிகளும்
செயல்பட மறுத்து
ஒத்துழையாமை இயக்கம்
நடத்தும் காலத்தில் கூட
இந்தக் கண்ணீர்ச் சுரபிகள்
ஒத்துழைக்க மறுத்ததில்லை.

எனக்குள் ஒரு
மிகப்பெரிய ஆச்சரியம்
இந்தக் கண்களுக்கு எங்கிருந்துதான்
கண்ணீர் விநியோகம்
காலம் எல்லாம் நடந்து
கொண்டிருக்கிறது என்பதுதான்!

மனிதன் இந்த உலகத்தில் இருந்து
விடைபெற்றுக் கொள்ளும் நிலையில்
கடைசி மூச்சுக்காகப் போராடிக்
கொண்டிருக்கும் வேளையில்
துடித்துக் கொண்டிருந்த இதயம்
துடிக்க மறுக்கிறது;
ஓடிக்கொண்டிருந்த இரத்தம்
ஓட மறுக்கிறது;



செயல்பட்டுக் கொண்டிருந்த
நாடி நரம்புகள்
செயல்பட மறுக்கின்றன;
இப்படி எல்லாம்
நின்று விடும் நேரத்தில்கூட
கண்ணீர் ஊற்றுக்களான கண்கள் மட்டும்
இதயத்தின் மொழியாக வெளிப்படும்
இரண்டு சொட்டுக் கண்ணீரைச்
சிந்த மறுப்பதில்லை!

கண்ணீர் என்பது என்ன
காயம்பட்ட மனத்தில்

துன்பங்களை மொழிபெயர்க்க
இயற்கை எழுதும் நீர் எழுத்து!

உலகப் பொதுமொழியான
கண்களின் மொழிக்கு
இதுதான் வரி வடிவம்!
நாடு, மொழி, இனம்,
வர்க்கம் கடந்து
எல்லோருக்கும்
பொது லிபியாக இருப்பதே
இந்த எழுத்துத்தான்



பாண்டியனின் அரசவையில்
கண்ணகியின் கண்ணீர்த்துளிகள்
நீதி விசாரணைக்கு உத்தரவிட்டன!

இந்தக் கண்ணீர் அமிலத்தில்
கரைந்து போகாத
இதயம் எதுவும்
இருக்க முடியாது!
அப்படி இருந்தால்
அது மனித இதயமாக
இருக்க முடியாது.

மனிதாபிமானத்தின் முகவரியே
இந்தக் கண்ணீர்த்துளிதான்!

இந்தக் கண்கள்
என்னும் சிப்பிக்குள்தான்
எத்தனை கோடி நித்திலங்கள்...
கண்கள்
கருணைப்பால் வார்க்கும்
அமுத சுரபிகள்...
சிரிக்கிறவனோடு சேர்ந்து
சிரிப்பதற்கு
எல்லோரும் முன் வருகிறார்கள்

அழுகிறவனோடு சேர்ந்து
அழ எல்லோராலும் ஆகாது!
ஒருவர் சிந்துகின்ற கண்ணீரோடு
இரண்டு சொட்டு
கண்ணீர் துளிகளை
எவன் கலக்கச் செய்கிறானோ
அவன்தான் மனிதன்!



ஒரு வயதான தாய்
வருந்தி அழப் பார்க்கும் போதெல்லாம்
அந்தத் தாயின் முகத்தில்
நான் என் தாயின்
முகத்தைத்தான் பார்க்கிறேன்.

யாரோ பெற்ற குழந்தை
ஏதோ துன்பத்தில்
ஆற்ற மாட்டாது
அழுகிற போது

என் குழந்தையின் அழுகை
என் இதயத்தில்
எதிரொலிக்கிறது!

ஒரு நாள் அஸ்ஸாம்
வீதிகளில் விழுந்துகிடந்த
பிஞ்சுக் குழந்தைகளின்
பிணங்களுக்காக
என் கண்கள்
இரங்கற் கவிதைகள் எழுதின!

1983இல்
வெளிக்கடை சிறைச் சாலையில்
என் அன்புச் சகோதரர்கள்
சிந்திய இரத்தத்திற்காக
என் கண்களும்
இரத்தம் சிந்தின



இதய அடுப்பில்
ஏற்றப்பட்ட துன்பத்தீயின்
சூட்டில் அல்லவா
கண்கள் இப்படிக் கசிகின்றன!

எனக்காக யாரும்
அனுதாபம் காட்டுவதைக் கூட
நான் அவமானம்
என்று கருதுகிறேன்!

ஆனால்
இந்த அனுதாபமும் அபிமானமும்
இருக்கின்றனவே
இவைதான் இன்றும்
செத்துப்போகாமல்
வாழ்ந்து கொண்டிருக்கும்
மனிதத் தன்மையின்
சத்திய சாட்சிகள்!

மனித சமுதாயத்தின்
ஆணிவேராக-
ஆதார சுருதியாக இருப்பது
அறிவும் ஆற்றலும் அன்று:
அனுதாபமும் அபிமானமும்தான்

ஒருவன் சிந்துகிற
கண்ணீர்த்துளிகளுக்கு இணையாக
இன்னொருவன் சிந்துகிற
இரண்டு சொட்டுக்
கண்ணீரைப்போல்
உலகத்தில் எதுவும்
ஆதரவு காட்டுவதாக அமையாது.



கண்ணீர்த் துளிகளுக்கு இணையாக
ஆதரவு காட்டுகின்ற
எந்த ஒரு .கருவியையும்
அறிவியல் கண்டுபிடித்துத்
தந்துவிட முடியாது.

உலகத்தின் துன்பங்களுக்கெல்லாம்
துன்பப்பட்டு
ஒருநாள் புத்தன் சிந்திய
கண்ணீர்த்துளிகள்
அவனுக்கு
ஞானஸ்நானம் செய்து வைத்தது!

கண்ணீர்த்துளிகள் நடத்தும்
ஞானஸ்நானத்திற்கு இணையான
ஞானஸ்நானம் ஏது?

உலகத்தின் துன்பங்களைக் கண்டு
எந்த இதயம் துடிக்கிறதோ
அந்த இதயம் மட்டும்தான்
மனித இதயம்.

உலகத்தின் துன்பங்களைக் கண்டு
எந்தக் கண்கள் நீர் எழுத்தால்
அனுதாபத் தீர்மானம்
எழுதுகின்றனவோ
அவைதான் கண்கள்.



இதயத்துக்குள்ளே
குமுறிக் கொண்டிருக்கும்
துன்பங்களுக்கு
இந்தக் கண்கள்தாம்
வடிகால்கள்!
அழுது முடித்து விட்டால்
துன்பபாரம் குறைந்து போகிறது!

உண்மையாகப் பார்க்கப்போனால்
இயற்கை நமக்குத் தந்திருக்கிற
நன்கொடைகளில்
இந்தக் கண்ணீர்
மிகச்சிறந்த நன்கொடை!

காலங்காலமாக
இந்தக் கண்ணீரின் வழியாகத்தான்
எத்தனையோ
கவலைகள் துன்பங்கள்
கரைந்து வெளியேறி இருக்கின்றன!



அணைகளில்
தேங்கிக் கிடக்கும் வெள்ளம்
மதகுகளில் வெளியேறுவது போல
கண்ணீர் ஒரு மனிதனுக்கு
தன் துன்பத்தை வெளியேற்றும் வாயில்!

அடுத்தவன் துன்பத்திற்கு
ஆறுதல் கூறும்
ஒரு கருணையுள்ள
இதயத்தின் தாய்மொழி
இந்த நீர் எழுத்தில்தான்
மனிதாபிமானமே
நிலை பெற்றிருக்கிறது.



# சிறைகள்

எல்லா மனிதர்களுமே
ஒரு வகையில் சிறைக் கைதிகளே

கண்ணுக்குத் தெரியாத விலங்குகள்
அவனது கால்களிலும் கைகளிலும்!



கண்ணுக்குத் தெரியாத எத்தனையோ
மதிற்சுவர்கள், கம்பிகள்,
அவனது
வாழ்க்கைப் பாதை முழுவதும்!

எங்கே போனாலும்
எங்கே நின்றாலும்
அந்தச் சிறைகளும்!
அந்த விலங்குகளும்!

அரசாங்கம் குற்றவாளிகளுக்கென்று
அமைத்து வைத்திருக்கும்
இந்தச் செயற்கையான
சிறைச் சாலைகளுக்குள்
ஆறு மாதக் கடுங்காவல் தண்டனையோ

ஆயுள் தண்டனையோ
மரண தண்டனையோ
பெற்றுப்போகிறார்கள்.

அவர்கள் மட்டும்தான்
கைதிகளா?
அவர்களை
பிடித்து வந்த காவலர்கள்
அவர்களுக்காக
வாதம் செய்யும் வழக்குரைஞர்கள்
தீர்ப்பு சொல்லும் நீதிபதிகள்
சிறைச்சாலைப்
பொறுப்பேற்றுக் கொண்டிருக்கும்
கண்காணிப்பாளர்கள்
எல்லோருமே கைதிகள்தாம்!



சிலந்தி தன்னைச்சுற்றித்
தானே வலை
பின்னிக் கொண்டிருப்பதைப்போல
இந்த மனிதனும்
தன்னைச் சுற்றித்தானே
சிறை எழுப்பிக்
கொண்டிருக்கிறான்!

கால தேவனின் மரணதண்டனைத்
தீர்ப்பு வந்து சேரும் வரை
நாம் எல்லோருமே
ஒவ்வொருவகையான

சிறைச்சாலைக்குள்
நம்மை நாமே
பூட்டி வைத்துக்கொண்டு
கைதி வாழ்க்கைதான்
வாழ்ந்து கொண்டிருக்கிறோம்!

"மனிதன் சிறைப்படலாம்
ஆனால்.... மனம் சிறைப்படக்கூடாது"
என்று எனக்கு நானே
சொல்லிக்கொண்டு வந்திருக்கிறேன்.

ஆனால்
இந்த மனம் இருக்கிறதே
நொடிக்கு நொடி கற்பனைகள்
கனவுகள் என்ற சிறைச்சாலைகளை
வானுயர எழுப்பிக்கொண்டு
அவற்றுக்குள்ளே
வலியச் சென்று சிக்கித் தவிக்கிறது.

பந்தம் என்பதற்கும்
பாசம் என்பதற்கும்
தளை -
சிறை என்றுதானே பொருள்.



பந்தமும் பாசமும் இல்லாமல்
வாழ்ந்த ஒருவனை
இந்த வையகம்

எங்கே பார்த்திருக்கிறது?
எப்போது பார்த்திருக்கிறது?

பற்றை விடுவதற்குக் கூடப்
பற்றற்றான் பற்றினைப்
பற்றிக் கொள்ளத்தானே
வள்ளுவன் வற்புறுத்தி இருக்கிறான்.

எந்தப் பற்றும் இல்லாமல்
உலகத்தின் வரவு செலவுக்
கணக்குகள் நேராவதில்லை.



குழந்தையாக இருந்து
தவழ ஆரம்பிக்கும்போதே
கையிலே விலங்குகள்!
நடக்க ஆரம்பிக்கும்போது
காலிலே விலங்குகள்!

புலன் உணர்வே இல்லாத
ஒருவனுக்குத்தான்
சிறைகள் இல்லை!

இளமையில்
கல்விக்கூடங்கள் சிறைச்சாலைகள்!
வாலிபத்தில்
காதல் சிறை!
வளர்ந்துவிட்டவனுக்கு

பணம் பதவி புகழ்
எல்லாமே சிறைகள்
கருணையும் இரக்கமும்கூடச்
சிறைச்சாலைகள்தாம்!

பிற உயிர்களுக்கு ஏற்படும்
துன்பத்தைக் கண்டு கலங்கிக்
கண்ணீர் வடிக்கசெய்யும்
தண்டனையைத் தருவது
சிறையில்லாமல் வேறென்ன



வாடிய பயிரை
கண்டபோதெல்லாம் வாடிப்போன
வடலூர் வள்ளலுக்கு
கருணைதானே கடுங்காவல் சிறை

முதலமைச்சர் பதவி என்பதைக்
கூடச் சூழ்நிலையின் கைதி
என்று உணருகின்ற ஞானம்
பேரறிஞர் அண்ணாவுக்கு மட்டுமே
வாய்த்த ஞானம்

தண்டனைகள் ஒவ்வொருவருக்கும்
ஒவ்வொரு விதமாக இருந்தாலும்
எல்லா மானிடரும்
கைதிகள் என்பதிலே
வேறுபாடில்லை!

உண்மையில் பார்க்கப்போனால்
பிறக்காதவர்களும்
செத்துப் போனவர்களும்தாம்
சுதந்திரமானவர்கள்
மற்ற எல்லோருமே
சிறைக்கைதிகள்தாம்!

உலகத்தின் மொத்தப் பரப்பளவில்
முக்கால் பாகம் கடல்
கால் பாகம் நிலம்!

என்றால் இந்தப் பூமித் தாயே
நீர்ச்சிறையில்
நிரந்தரக் கைதியாகக்
கிடப்பவள்தானே!
பூமித்தாய் என்னும் கைதியின்
பிள்ளைகளும் சிறைக் கைதிகளே!



அதனால்தான்
நிதர்சனமாக இருக்கும்
இந்த உலகத்தில்
சிறைதண்டனை அனுபவித்து
அலுத்துப்போன இந்த மனிதன்
சூன்யமான... ஒன்றுமே இல்லாத
ஆகாயத்தில் சொர்க்கம் இருப்பதாகக்
கற்பனை செய்துகொண்டான்.

இல்லாத ஒன்றை
இருப்பதாகக் கருதி
அந்த கற்பனை நடைவண்டியைப்
பிடித்துக் கொண்டுதான் மானுடசாதி
நடக்க வேண்டி இருக்கிறது!
ஜனனம் முதல் மரணம்வரை
பாதம் புகும் இடமெல்லாம்
சிறைகள்! சிறைகள்!





# சருகுகள்

ஓர் அழகான
ரோஜாத் தோட்டம்...
இது வசந்த காலம் என்பதை
தோட்டத்தின் வாயிலில்
நுழையும் போதே
பறைசாற்றிக் கொண்டிருந்தது!



மனிதர்களைப் போல
எத்தனை எத்தனையோ மலர்கள்;
எத்தனை எத்தனையோ நிறங்கள்.

ஒன்று சிவந்து சிரித்தது;
ஒன்று மஞ்சள் முகம்
காட்டி மகிழ்ந்தது;
ஒன்று வெண்ணிறமாய் விரிந்திருந்தது;
பாதி சிவப்பு பாதி வெள்ளையுமாக
ஒன்று!
இப்படி இன்னும்
எத்தனையோ வண்ணங்கள்!

நான்கைந்து பேர்
தோட்ட வேலைகளைக்
கவனித்துக் கொண்டிருந்தனர்.
ஒவ்வொருவனும்
ஒவ்வொரு வயதுக்காரன்:
ஒவ்வொருவனுக்கும்
ஒவ்வொரு விதமான வேலை:

ஒருவன் ஒரு பக்கத்தில்
வளர்ந்த நடுவயதுச் செடியில்
ஒரு பகுதியைக் கத்தரித்து
புதிய செடிகளுக்குப்
பதியம் போட்டுக் கொண்டிருந்தான்:

இன்னொருவன்
இன்னொரு பக்கத்தில்
அந்தச் செடிகளுக்கான உரங்களைத்
தூவிக் கொண்டிருந்தான்:



அடுத்தொருவன்
நீண்ட குழல் மூலம்
நீர் பாய்ச்சிக் கொண்டிருந்தான்:

வேறொருவன்
நன்றாக மலர்ந்திருந்த மலர்களில்
சிலவற்றைத் தோட்டத்துச்
சொந்தக்காரிக்காகப்
பறித்துக் கொண்டிருந்தான்:

மற்றும் ஒருவன்
தன் தலையுயரத்திற்கும்மேல்
நீண்ட மூங்கில் கொம்பில்
சேர்த்துக் கட்டப்பட்ட துடைப்பத்தால்
கீழே உதிர்ந்து வறண்டு கிடந்த
சருகுகளைப் பெருக்கித்
துப்புரவு செய்து கொண்டிருந்தான்:

ஒருவன் அவற்றை எல்லாம்
வாரி எடுத்து
அந்தத் தோட்டத்தின் எல்லையில்
கொட்டிக் கொண்டிருந்தான்:



தலைப்பாகை கட்டிக்கொண்டு
அங்கே குவிக்கப்பட்டுக்
கிடந்த சருகுகளுக்கு
வாயிலே பீடியை வைத்துப்
புகைத்த வண்ணம்
இன்னொருவன்
எரித்துக் கொண்டிருந்தான்.

சருகுகள்
சாம்பலாகிக் கொண்டிருந்தன.
மறு நாள் பார்க்கும் போது
அந்தச் சாம்பல்கூடக்
கண்களில் தட்டுப்படவில்லை!

புதிய சருகுகள்
தீக்குளிப்பதற்காக
வந்து விழுந்து கொண்டிருந்தன!

தோட்டத்தின் ஓரத்திலே இருந்த
ஆலமர நிழலில்-
வெயிலில் நடந்து சென்றதால்
என் தேகத்தில் ஏற்பட்ட
வேர்வைக் கொப்புளங்களை
ஆற்றிக் கொள்வதற்காக
அமர்ந்தேன்.



அந்தத் தோட்டம்
இப்போது எனக்கு
ஒரு தோட்டமாகப் படவில்லை;
வாழ்க்கைத் தத்துவத்தைக் கற்றுத்தரும்
கலாசாலையாகப் பட்டது.

பதியம் போட்டவனும்
உரம் இட்டவனும்
நீர்ப் பாய்ச்சியவனும்
மலர்ச் செல்வங்களுக்கு
தாயும் தந்தையுமாக
என் கண்களுக்குத் தோன்றினார்கள்

ஒன்று அரும்பாக இருந்தது
ஒன்று மொட்டாக இருந்தது
ஒன்று பாதி மலராக இருந்தது
ஒன்று முழுமலராக முகம்காட்டியது

அந்த மலர்கள் தாம்
ஓரிரு நாட்களில்
கீழே உதிர்ந்தன
செடியில் மலர்.
சிரித்துக் கொண்டிருந்தபோது
இலை வேறு; மலர் வேறு;

ஆனால் மலர் உதிர்ந்து விழுந்து
சருகாக வறண்டு கிடக்கும்போது...
இலைக்கும் மலருக்கும்
வேறுபாடு தெரியவில்லை!

இலையும் சருகுதான்!
எழில் ததும்பப் பூத்துத்
தலையசைத்து நின்ற
மலரும் சருகுதான்!

எல்லாச் சருகுகளும் சருகுகள்
என்றுதான் வாரிக் கொண்டுவந்து
வெளியே கொட்டியவனும் கொட்டினான்!



எல்லாச் சருகுகளும் சருகுகள்
என்றுதான் எரித்தவனும் எரித்தான்!
எரிக்கப்படுவது என்று வந்துவிட்ட
பின்னாலே
இலைச் சருகும் சருகுதான்!
மலர்ச் சருகும் சருகுதான்!




பதியம் போட்டவனும்
உரம் இட்டவனும்
நீர் பாய்ச்சியவனும்
தாயும் தந்தையும் போன்றவர்கள்
என்றால்...

தோட்டத்தின் எல்லையில்
இவை மணம் வீசிய மலர்கள்
என்றும் தெரிந்து கொள்ளாமல்
அந்தச் சருகுகளை
எரிக்கின்றானே
அவன் யார்?
அவன்தான் வெட்டியான்!



அவனுக்கு
இலை சருகானால் என்ன?
மலர் சருகானால் என்ன?
எல்லாம் ஒன்றுதான்!
எரிக்கப்படவேண்டியதுதான்!
இதுதான் வாழ்க்கை.

ஒரு குழந்தைக்கு
ஒரு பக்கத்திலே
பிரசவம் பார்க்கப்படுகிறது;
ஒரு குழந்தை
தாயின் மார்பகத்தில்
பாலருந்தி கொண்டிருக்கிறது;

ஒன்று
தவழ்ந்து விளையாடிக் கொண்டிருக்கிறது!
ஒரு சிறுவன்
தோளிலே புத்தகத்தை சுமந்து
பள்ளிக்குப் போகிறான்!

ஓர் இளைஞன்
மணக்கோலத்தில் இருக்கிறான்!
ஒருவன் பாதி நரைத்துப்
பாதி கறுத்து
நடுவயதுப் பருவத்தில்
நடந்து போய்க் கொண்டிருக்கிறான்.

ஒருவன் நோயும் பாயுமாக
மரண மூச்சோடு போராடிக்
கொண்டிருக்கிறான்;
ஒருவன் மயானத்திலே
எரியூட்டப்பட்டுச் சாம்பலாகிக்
கொண்டிருக்கிறான்



அங்கே
உயர்ந்தவனும் இல்லை!
தாழ்ந்தவனும் இல்லை!
எல்லாம் பிணங்கள்தான்!

மனிதனுக்கு நூறு வயது
மலர்களுக்கு மீறிப்போனால்
நான்கு நாட்கள்

ஆயுட்காலம் வேறுபடலாம்
ஆனால் வாழ்க்கை என்பது
மலருக்கும் ஒன்றுதான்!
மனிதனுக்கும் ஒன்றுதான்!

சருகுகள்
அரும்பு விட்டு மலர்ந்து சிரித்து
அழகு காட்டிக் கொண்டிருந்த
மலர்களின் செத்துப்போன
சடலங்கள்!





# வாடகை வீடுகள்

‘இவனெல்லாம்
ஆறு மாதத்துக்கொரு முறை
அடுத்த வீடு தேடிச்
சட்டிபானை தூக்குகிறவன்’
இப்படியான ஏளனப் பேச்சுக்களை
நான் பிறந்த
அந்தப் புழுதிக் காட்டில்
கல்விப் பயிர் விளையாத
களர்நிலத்தில்
ஆம்
என் சொந்த ஊரில்
என் சின்ன வயதில்
நிரம்பக் கேட்டிருக்கிறேன்.



எங்கள் குடும்பமும்
இந்தப் பேச்சுக்களுக்கு
ஆளாகும் பேறு வெற்றிருந்தது.
வாடகை வீட்டில் குடியிருப்பது
அவ்வளவு கேவலம்;
வக்கற்றுப்போன நிலைமை!

சென்னையில்
ஆயிரத்துத் தொள்ளாயிரத்து
அறுபத்தாறு முதல்
அறுபத்தி எட்டு முடிய

2 வீரபத்திரன் தெரு
மயிலை என்பதுதான்
எனது முகவரி!

அந்த வீட்டில்
ஒன்றேகால் அறைகளில்
நான் என் குடும்பத்தோடு
குடியிருந்தேன்!



வாடகைக்கு வீடு
எடுத்திருப்பவனுக்கும்
கொடுத்திருப்பவனுக்கும்
இடையில் எத்தனை இடைவெளி?
எவ்வளவு பெரிய
அந்தஸ்து பேதம்?

ஒன்றாம் தேதி பிறக்கும் போதே
வாடகைக்குக் குடியிருப்பவனின்
உடல் வேர்த்துப் போகும்;
பெரும்பாலான வீட்டுக்காரர்கள்
வீட்டுக்காரர்கள் அல்ல!
ஈட்டிக் காரர்கள்!

நல்லவேளை...
நான் குடியிருந்த வீட்டுக்காரர்
அவர்களில் விதிவிலக்கு!
அவர்
உயிரோடு இருந்தவரை
வாடகைக்கு என்னை
உயிரெடுத்ததில்லை!

அவர் ஒருநாள்
தன் சொந்த வீட்டையே
காலி செய்துவிட்டு
நாலு பேருக்கு நன்றியைச்
சொல்லாமல் சொல்லிவிட்டு
சமரசம் உலாவும்
சந்நிதானம் போய்ச்சேர்ந்தார்!



அவர் உயிர்போனவுடன்
எஞ்சியிருந்தவர்கள் என்னை
உயிர் எடுக்க ஆரம்பித்தார்கள்!
வாடகைக்காக
இரண்டு மூன்று மாதம் என்று
வாடகை நிலுவை!

அவர்கள் என்னைச் சிறுமையாகப்
பார்த்த பார்வையும்,
நடத்திய விதமும்
என் சுயமரியாதைக்குச்
சூட்டுக் கோல்களாகத் தெரிந்தன!

அது
பாரதியைத் தின்ற பசி -
என்னையும்
பாதி தின்று முடித்திருந்த நேரம் -
ஒருநாள் நான் வாடகைப்பணம் கொடுக்காததால்
பெற்ற அவமானத்தால்
எப்படியோ வாடகை நிலுவையைக்
கடன் வாங்கிச் செலுத்திவிட்டு
வீட்டைக் காலி செய்தேன்!

என் கண்களில் எழுந்த கனலால்
நானும்
ஒரு காளமேகம் ஆனேன்!



வீட்டைக் காலி செய்யும் நாள்
நான் தங்கி இருந்த
முழு அறையின் சுவரில்
"திட்டேறி வீங்கித்
திமிரேறி நிற்கின்ற
கொட்டுமுழ வொத்த
கொடுமுலையீர் திட்டுகிறீர்
பட்டுடுத்துப் பாலுண்டு
பல்லாண்டு வாழ்வதில்லை
விட்டு விட்டுப் போவதுதான் வீடு."
என்று அறம்பாடி எழுதி வைத்துவிட்டு
வெளியேறினேன்.

நான்காண்டுகள் கழித்து நான்
கேள்விப்பட்டேன்!
அந்த வீடு கடனில் மூழ்கிப்போய்
வீட்டின் உடைமையாளர்களே
வீட்டைக் காலி செய்துவிட்டு
எங்கோ ஒரு சேரிப் பகுதியில்
குடிசையில் வாழ்கிறார்கள் என்று!

இது என் கவிதையால் நடக்கவில்லை!
அவர்கள் பட்ட கடனால்தான் நடந்தது!
நான் அறம் பாடியதால்தான்
இப்படி நடந்தது என்று நம்புகிற
வைதிகம் எனக்கில்லை!



வீடு என்பது என்ன....?
விட்டு விடுவது
சுட்டது சூடு:
பட்டது பாடு:
தொட்டது தோடு:
அப்படித்தான் விட்டது வீடு.

நாம் இருப்பதை வீடு என்று
சொல்லவில்லை;
என்றோ ஒருநாள்
நாம் விட்டுவிட்டுப் போவதைத்தான்
வீடு என்று சொல்கிறோம்

விட்டுவிட்டுப் போவதுதான்
வீடு என்று
ஆகிப்போன பின்னால்
சொந்த வீடு என்ன?
வாடகைவீடு என்ன?
எல்லா வீடுகளுமே விட்டு
விட்டுப்போகும் வீடுகள்தாம்!

ஓர் ஊரே குடியிருக்கக்கூடிய
அளவுக்குப் பெரிய அரண்மனைகளில்
அந்தப்புற சுகம் அனுபவித்த
மன்னாதி மன்னர்கள் கூட....
அவர்கள் வாழ்ந்த அந்த
மாட மாளிகைகளைவிட்டு
மாண்டு போனார்கள்
என்பதனால்
அவர்களைச் சார்ந்தவர்களாலேயே
நிர்ப்பந்தமாக
வெளியேற்றப்பட்டிருக்கிறார்கள்!



வாடகை கொடுக்காததற்காக
நான் அன்று வெளியேற்றப்பட்டு
வெளியேறி வந்தேன்!

அது என் வீடல்ல!
வாடகை வீடு:
என்றால்

சொந்த வீட்டில் இருக்கும் எல்லோரும்
நிரந்தரமாகச்
சொந்த வீட்டிலேயா இருக்கிறார்கள்?

மனிதன் உயிரோடு இருக்கும்வரைதான்
இது வாடகை வீடு;
சொந்த வீடு என்பதெல்லாம்
உயிர்போய்விட்ட பின்னால்
இந்த மனிதனின் உடம்பே
புறம்போக்காக மாறிவிடுகிறது!



அதோ
அந்தக் கடலுக்குப் போய்ச்
சேர்ந்து விட்ட பின்னால்
அந்த உடலுக்கு
யார் உரிமை கொண்டாடுகிறார்கள்?
யார்தான் உறவு கொண்டாடுகிறார்கள்?

ஆம்
திடல்கள் மட்டுமே
புறம்போக்காக இல்லை:
ஒருநாள் இந்த உடல்களும்
புறம்போக்கானவைதாம்!
புறம்போக்காக மாறிப்போன உடலுக்கு
பட்டா செய்த இடம் ஏது?
பாத்தியதை உள்ள வீடு ஏது?

கல்லறைத் திடல் இருக்கிறதே!
அது உள்ளார்க்கும் இல்லார்க்கும்
ஆளுக்கொரு வீடு என்று
இயற்கைத் தேவன்
அனுமதித்திருக்கும்
வீட்டு வசதி வாரியம்!

இந்த வீட்டு வசதி வாரியத்தில்
குச்சு வீட்டுக்காரனுக்கும்
மச்சு வீட்டுக்காரனுக்கும்
ஒரே மரியாதைதான்!
ஒதுக்கப்படும் இடத்தின்
அளவும் ஒரே அளவுதான்!

உலகத்திலேயே முதன் முதலாக
அமைக்கப்பெற்ற வீட்டு வசதி வாரியம்
அந்த இயற்கைத்தேவன்
அமைத்து வைத்த வாரியம்தான்!
மற்ற வாரியங்கள்
மனிதர்கள் செய்யும் காரியங்கள்!



அதிலே முறைதான் இருக்கும்!
இதிலே முறையும் இருக்கும்;
குறையும் இருக்கும்!
அங்கு எந்த மனுவும்
நிராகரிக்கப் படுவதில்லை!
இங்கே எல்லா மனுக்களுமே

ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை!
ஏற்றுக்கொண்டு உண்டு
என்றால் உண்டு!
இல்லை என்றால் இல்லை!

நான் அப்போது
வாடகை வீட்டில்
இருந்தேன்!
இப்போது சொந்த வீட்டில்
இருக்கிறேன்

ஆனால்...
காலம் கற்பித்த பாடம்
அந்தப் பாடத்தில் இருந்து
நான்பெற்ற ஞானம்
எனக்குச் சொல்கிறது!



இந்த உலகமே
ஒரு வாடகை வீடு
ஆம்
எல்லாருக்கும் எல்லா வீடுகளும்
வாடகை வீடுகள்தாம்.



# நாளை

“ஓடம் ஒன்று காற்றில்
போற வழி நாமும் போகின்றோம்!
ஏதோ ஒன்று நாளை என்று
இன்னும் வாழ்கின்றோம்,”
இப்படி ஒரு
பாடலை நீண்ட நாட்களுக்கு முன்னர்
திரிபுர சுந்தரி என்ற
படத்துக்காக எழுதினேன்.

நேற்றை வாழ்க்கையும்
நிம்மதியாக இல்லை!
இன்றைய வாழ்க்கையும்
இதமாக இல்லை!
என்று சலித்துக் கொள்கின்ற
மனிதர்கள் எல்லோருமே
நாளையைப்பற்றிய
நம்பிக்கையிலேயும்
அந்த நம்பிக்கையில்
வளர்த்துக் கொண்டிருக்கும்



கனவுச் சுகங்களிலேயும்
வாழ்க்கைப் பயணத்தைத் தொடர்ந்து
நடத்திக் கொண்டிருக்கிறார்கள்.

ஒரு சூதாட்டக்காரன் கூட
தொடர்ச்சியான தோல்விகளே
ஏற்பட்டிருந்தாலும்
அடுத்த ஆட்டத்தில்
வெற்றி பெற்று விடுவோம்
என்ற நம்பிக்கையில்
பெற்றி பெற்று விடவேண்டும்
என்ற ஆசையில்தான்
ஆடிக் கொண்டிருக்கிறான்!



குச்சிலே வாழ்கிறவனுக்குக் கூடக்
குபேரக்கனவுகள்!
இன்றில்லாவிட்டால்
நாளை ஒரு நாள் நாமும்
இப்படி வாழலாம்
அப்படி வாழலாம்
என்னும் லாட்டரிக் கற்பனையில்தான்
அது நடக்கிறதோ இல்லையோ
மனிதன் நடந்து கொண்டிருக்கிறான்!

நாளை என்பது
இன்றாகி நேற்றாகி
நினைத்த ஆசைகள்

எல்லாம் நிராசைகள்
ஆகிப்போனாலும்,
நாளையும் நாளைக்குப்
பின்னும் தொடர்ந்து வருகின்ற
நாளை என்னும் நம்பிக்கைதான்
இந்த மனிதனின்
ஜீவ சக்தியாகத் திகழ்கிறது!

எல்லா மனிதர்களுக்கும்
மனம் என்ற ஒன்று இருக்கிறது.
அந்த மனம்
கனவுகளும் கற்பனைகளும்
வற்றாமல் ஊற்றெடுக்கும்
ஒரு ஜீவநதி!

ஆசையும் அதனால் உண்டாகும்
கனவுகளும் கற்பனைகளும்
ஆளுக்குத் தகுந்தபடி
கனவும் அமைப்பும்
மாறலாமே தவிர
ஆசையும் கற்பனையும்
இல்லாத மனமே இல்லை.



இந்த ஆசையும்
கற்பனையும் நிறைவேறாதவையாக
நெஞ்சத்தைக் குத்திக் காயப்படுத்தி
இரணமாக்குபவையாகக் கூட
இருக்கலாம்.

இருந்தாலும்
இந்த நிறைவேறாத
ஆசைகளும் கற்பனைகளும்தான்
நடக்காத மனிதனையும்
நடத்திக் கொண்டிருக்கின்றன.

அடுத்த வேளை சோற்றுக்கு
வழியற்றவன் கூட
இந்த வேளை சோற்றுக்கென்று
வைத்திருக்கும் காசையும்
மரத்தடியில் உட்கார்ந்திருக்கும்
கிளிஜோசியக்காரனிடம்
கொடுத்துவிட்டு



அவன் இட்டுக்கட்டிச் சொல்லும்
எதை எதையோ நம்பிக்கொண்டு
அந்த வேளை வயிற்றில்
எரிந்து கொண்டிருக்கும் பசித்தீயை
சொந்தத்தில் பாதி
ஜோதிடத்தில் பாதி
என்று பார்த்துக்கொண்டிருக்கிற
நாளையைப் பற்றிய நம்பிக்கையால்
அந்த நேரத்துக்கு
மறந்துவிட்டு
அல்லது மரத்துப்போகச் செய்துவிட்டு
நடந்து கொண்டிருக்கிறான்!

செருப்புக்கூட
இல்லாமல் நடந்து நடந்து
தேய்ந்து போன பாதங்களும்
அலுத்து ஓய்ந்துபோன கால்களும்
இன்னமும்
தேய்ந்து போவதற்கும்
அலுத்து ஓய்ந்து போவதற்கும்
சம்மதப்பட்டு தன்னைத்
தயார் படுத்திக் கொள்வதற்குக் காரணம்
இந்த நாளை என்ற ஒன்றுதான்.

கோடை வெய்யிலில்
கானல் நீரும் கங்கை நீராக
காவிரி நீராகக் காட்சி
தருகிறது!
கங்கையும் காவிரியுமாவது
ஒரு குறிப்பிட்ட
பூகோள எல்லைக்குள் நின்று
போகின்றன!

ஆனால் கானல்
அப்படி இல்லை:
அங்கிங்கெனாதபடி
கடவுள் எங்கும் தெரிகிறானோ
இல்லையோ
இந்தக் கானல் மட்டும் தெரிகிறது



கானல் நீரை விரட்டிக்கொண்டு
ஓடிய மானுக்கு
ஒருவேளை கங்கை நீரும்
அகப்படலாம்!
காவிரியும் காலுக்கு கீழே
வந்து சேரலாம்!
தாகமும் தீரலாம்!

ஆனால்,
இந்த மனிதனின்
வாழ்க்கை ஓட்டத்தில் மட்டும்
எங்கோ ஓரிடத்தில்
மானுக்குத் தாகம் தீர்ந்ததைப்போல
இந்த மனிதனின் மனத்துக்குத்
தாகம் தீர்வதில்லை.



நேற்றைக் காட்டிலும்
இன்றைக் காட்டிலும்
ஒரு வேளை நாளை என்பது
நலமாகவும் வளமாகவும்
அமைந்துவிட்டால் கூட
அப்படி வந்த வாழ்க்கையும்
முழுமையான மனநிறைவைத் தருவதில்லை

வந்து சேர்ந்த இடம்
வந்து சேரும்வரை பெரிதாகத் தெரிகிறது.
சேர்ந்த பின்னால்

இவ்வளவுதானா என்று
சிறுத்துப்போய்
தெரிகிறது

மானுக்காவது
கானலைக் கடந்து
சந்தித்த கங்கையைக்
கங்கை என்று கருதும்
ஆறுதல் ஏற்படுகிறது!

மனிதனுக்குத்
கங்கையும் கானலாகவே
காட்சி தருகிறது!

வானம் கூட
எல்லைக்குள் நின்றுவிடும்!
மனித மனம்
ஓர் எல்லைக்குள் நிற்பதில்லை.



"போதும் என்ற மனமே
பொன் செயும் மருந்து,"
என்று முதுரை சொன்னவனே கூட
போதும் என்ற மனத்திற்குப்
பொன்னைத் தானே
உவமை சொன்னான்!

போதும் என்று ஆறுதல்
அடையாமல்

போதாது என்ற
ஏக்கமும் தவிப்பும்
இருப்பதாலேதான்.

அவன் நேற்றோடும்
நின்று விடாமல்
இன்றோடும்
நின்று விடாமல்
நாளையை நினைத்து ஓடிக்
கொண்டே இருக்கிறான்.

ஒரு காலண்டர்
மாதத்துக்கு நாளை என்பது
ஒரு முந்நூற்றறுபத்தைந்து
நாள் என்று முன்கூட்டியே
நிர்ணயம் செய்து
அச்சடித்து வைத்திருக்கிறோம்.



மனிதனுக்கு அப்படி இல்லை;
அவனுக்கு நாளை என்பது
'நாளை' ஒருநாள் மட்டுமாகக் கூட
இருக்கலாம்
நாற்பதாண்டு கழித்துவரும்
'நாளை'யாகக் கூட இருக்கலாம்!

இந்த 'நாளை'கள்
வரையறுக்கப்படாமல் இருப்பதும்

நேற்றுகள் இன்றுகள் ஆகி
நிறைவைத் தராமல்
இருப்பதும்தான்
இந்த மனித வாழ்க்கைத் தொடர்
ஓட்டம் இயற்கை முடித்து
வைக்கிற நாள்வரை
நிற்காமல் ஓடிக்கொண்டிருப்பதன்
இரகசியங்கள்.

நினைந்து நிறைவேறும்
வாய்ப்புள்ள ஒருவனுக்கும்சரி
அத்தகைய வாய்ப்பற்ற
ஒருவனுக்கும் சரி
நாளை என்பதில் உள்ள
கற்பனைச் சுகத்தில் வேறுபாடே
இருப்பதில்லை.



மனநிலையில் பார்த்தால்
நிறைவேறியவனும் ஒன்றுதான்!
நிறைவேறாதவனும் ஒன்றுதான்!
நிறைவேறியவன் இன்னொன்றை
நினைக்கிறான்!
நிறைவேறாதவன் நிறைவேறாததை
நினைக்கிறான்!
எல்லாம் சரியாய் போய்விட்டது
என்ற நிலைமை
இருவருக்கும் இல்லை.

உலகத்தில்
இதுதான் முழுமையானது
என்றும் இல்லை;
இதுதான் முடிவானது
என்றும் இல்லை.

வழிப்பயணத்தில்
டிக்கெட் வாங்கியவரை
பயணம் சென்று
அந்த இடம் வந்ததும்
இறங்கிப் போய்விடுவதைப்போல
வாழ்க்கைப் பயணத்தில் நடப்பதில்லை.

ஒரு முடிவு தெரியாத
எல்லையை நோக்கி
முழுமை பெறாத எண்ணங்களைத்
தாங்கிக் கொண்டு நடப்பதனாலேதான்
இவன் நாளையை நோக்கி
இன்னும் இன்னும் என எதிர்பார்த்து
நம்பிக்கையைப் பிடித்துக்கொண்டு
நடந்து கொண்டிருக்கிறான்



ஆம்
நேற்றைய வாழ்வும்
நிம்மதியாக இல்லை!
இன்றைய வாழ்வும்
இதமாக இல்லை!

நாளையாவது இருக்கும்
என்ற நம்பிக்கையை தருகிற
அந்த ‘நாளை’தான்
மனித சமுதாயத்தை வாழவைத்துக்
கொண்டிருக்கிறது



கடந்த ஆயிரம் ஆயிரம்
ஆண்டு காலமாக நடந்து
முடிந்துபோன எல்லா நாட்களுமே
ஒவ்வொரு நாளில்
‘நாளை’யாக இருந்தவைதான்



# மரணம் சுதந்திரம்

இந்த வாழ்க்கை...
ஒரு பாதை தெரியாத பயணம்
எங்கே போகிறோம் என்றும்
தெரியாமல்
எதுவரை எதற்காகத் போகிறோம்
என்றும் புரியாமல்
போய்க் கொண்டிருக்கும்
ஒரு மர்மப் பயணம்
விடை காண முடியாத
ஒரு புதிர்ப் பயணம்!



இந்தக் கணம்வரை
நடந்த பயணத்திற்கு
மட்டும்தான் நாம் உத்தரவாதம்!
அடுத்த கணத்தில் இருந்து
தொடருகின்ற பயணத்தைத்
காலம் முடிவு செய்கிறது!

நாளைய நிகழ்ச்சிகள் என்று
நாம் நிரல்படுத்திக் கொள்வது

நாளை நாம் இருந்தால் மட்டுமே
நம்மால் நிறைவேற்றப்படக் கூடியன:
நாளைக்கு என்ன செய்யப் போகிறோம்
என்று திட்டமிடுவது
நாளை நாம் இருப்போம் என்ற
தற்காலிக நம்பிக்கையில்
போட்டு வைக்கும்
ஒரு தற்காலிகத் திட்டம்தான்!



தன் மகளுக்கு
பதின்மூன்றாம் நாளை
மண நாளாகக் குறித்துவிட்டு
பத்தாம் நாளே
மரணம் அடைந்து விடுகிறான் தந்தை!

மகளுக்கு
பதின்மூன்றாம் நாளை மணநாள் என்று
குறித்த தந்தைக்கு
பத்தாம் நாளை மரணநாள் என்று
காலம் கணக்கெழுதி முடித்து விடுகிறது!

திருமணத்திற்கு நாள் குறித்தவன்
அந்தத் திருமணத்தைக் காண
காலம் அனுமதி மறுத்துவிட்டது.
காலம் ஒன்று மட்டும்தான்
உலகிலேயே கொடுமையான
சர்வாதிகாரி!

காரணம்...
பல சர்வாதிகளின்
மூச்சுவிடும் அதிகாரத்தைக்கூட
இந்தக் காலம்தான்
பறித்துக்கொண்டிருக்கிறது!

எல்லாவற்றையும்
கண்டறிந்திருக்கின்ற மனிதன்
தனக்கு சாவு எப்போது வரும்
என்பதை மட்டும்
கண்டுகொள்ள முடியாமல்
இயற்கை அவனது கண்களில்
இரும்புத்திரை
போட்டு வைத்திருக்கிறது



காரணம்...
சாகப்போகிற நாள்மட்டும்
மனிதனுக்கு முன்னரே
தெரிந்துவிடுமானால்
அவன் வாழவே மாட்டான்
சாகும் நாளை முன்னுணர்ந்துகொள்ள
முடியாமல் இருக்கும்
இந்த மனிதனின் அறியாமை
இயற்கை அவனுக்குத்
தந்த அருட்கொடை!

இந்த உலகம் என்னும்
சிறைச்சாலையில்...
எல்லாருமே மரண தண்டனைக்
கைதிகள்தாம்!

ஒரு வேறுபாடு...
மனிதர்கள் அமைத்திருக்கின்ற
சிறைச்சாலையில்
மரண தண்டனைக்
கைதிகளுக்குத் தங்கள்
மரண நாள்
முன்னமே தெரிந்திருக்கிறது
இந்த உலகம் என்னும்
இயற்கைச் சிறைச் சாலையில்
அது இரகசியமாக
மூடி வைக்கப்பட்டிருக்கிறது!
மெய்யாகச் சிந்தித்துப் பார்த்தால்
இறப்பு அல்ல துன்பமானது:
பிறப்பு மட்டும்தான்
துன்பமானது.



தாயின் கருவறையில் இருந்து
இந்த மண்ணில் குழந்தை
விழுந்தவுடனேயே அழுகிறதே
என்ன காரணம்,
இந்த நாளில் இருந்து

தான் சாகப்போகிற
அந்த நாள்வரை
எத்தனை எத்தனை துன்பங்களைச்
சந்திக்க நேருமோ என்ற சஞ்சலம்!

ஒன்றுமே தெரியாத பச்சை
மண்ணுக்கு
அந்த ஒன்றை மட்டும்
பிறப்பிலேயே இயற்கை
கொடுத்து வைத்திருக்கிறது!

உண்மையில் பார்த்தால்
மனிதன் வாழ்வதற்காக
அழவேண்டுமே தவிர
சாவதற்காக
அழவேண்டுவதும் இல்லை!
அஞ்சவேண்டுவதும் இல்லை!



காரணம்...
வாழ்வுதான் துன்பம்,
சாவு துன்பம் அல்ல:
மரணம் துன்பத்தில் இருந்து கிடைக்கும்
விடுதலை!

ஆம்!
நிரந்தரமான விடுதலை!
தூங்கிவிட்டால் துன்பம்

தெரிவதில்லை!
ஆனால்...
துன்பம் மனிதனைத் தூங்க
விடுவதில்லை.

துன்பங்கள் நெஞ்சைத் துளைக்கும்போது
'தூங்கினால் துன்பமில்லை' என்று
தூக்கத்திற்காக மனிதன் ஏங்குகிறான்!

செயற்கையாக வேனும் வராத
தூக்கத்தை வரச்செய்துகொள்ள
மாத்திரைகளிடம் மண்டியிட்டுக்
கிடக்கிறான்!

இந்தத் தூக்கம்
தற்காலிகத் தூக்கம்!
துன்பத்தில் இருந்து
தன்னை விடுவித்துக் கொள்வதும்
தற்காலிகமானதுதான்!



நிரந்தரமாகத் துன்பத்தில்
இருந்து விடுதலைபெற...
நிரந்தரமான தூக்கம்தான்
நிரந்தரமான பரிகாரம்:
அந்த நிரந்தரமான தூக்கம் எது
அதுதான் மரணம்

எனவே;
மரணம் துன்பமானது அல்ல
ஜனனம்தான் துன்பமானது

"The Death is not a calamity
for the man
one who dies out on the other hand
it is a happy deliverance"

இப்படி எங்கேயோ
எதிலேயோ படித்ததாக ஞாபகம்!
இந்த வரிகளை எவன் எழுதினானோ
அவன் அறிஞன்! பேரறிஞன்!!

உயிர் என்ற ஒன்று இருக்கும்வரை
மனம் என்ற ஒன்று இருக்குவரை
உணரும் உணர்வுகளும்
சிந்திக்கும் சிந்தனைகளும்
இருந்துதான் தீரும்!



உயிரற்ற சடலம் தன்னைச்
சார்ந்தவர்களின் துன்பத்தைக் கண்டு
கலங்குவதும் இல்லை;
கண்ணீர் வடிப்பதும் இல்லை!

தன்னந்தனியாய் வாழ்வது சுகமானது;
ஆனால் அது இயலாதது;

இயற்கைக்கும் மனித இயல்புக்கும்
ஒவ்வாதது
மனைவி என்றும்
மக்கள் என்றும்
சொந்தம் என்றும்
பந்தம் என்றும்-
சிலந்தி தன்னைச் சுற்றித் தானே வலை
பின்னிக்கொண்டு சிறைப்படுத்திக்
கொள்வதைப் போலத்தான்.
மனிதனும்
தன்னைச் சுற்றித் தானே
சிறை எழுப்பிக் கொள்கிறான்!

'பந்தம்', 'பாசம்' என்பதற்கெல்லாம்
'தளை' அல்லது 'சிறை'
என்பதுதானே பொருள்



ஊரும் உறவும்
சொந்தமும் பந்தமும்
இல்லாமலும் மனிதன்
இருக்க இயலாது!

இவை எல்லாம் இருக்கும் வரை
துன்பத்தையும் தவிர்க்க இயலாது!
ஒரு தொடர்துன்பத்திற்கு
நாம் வைத்திருக்கும் பெயர்தான்
வாழ்க்கை என்பது!

இந்தத் துன்பத்தின் தொடக்கம்
பிறப்பல்லவா?
பிறப்பறுக்க வேண்டும்
பிறப்பறுக்க வேண்டும்
என்று தமிழ்ச் சான்றோர்கள் பாடியது
ஒரு நிரந்தரமான சுதந்தரத்தைத்
தேடிக் கொள்ளத்தான்!

பசி எடுத்தபோது
சோறு கிடைக்கவில்லை!
சோறு கிடைக்கும் காலத்தில்
பசி எடுக்கவில்லை!
சாப்பிட்டால் ஜீரணம் ஆகவில்லை!
தூக்கம் கண்களை ஆட்கொண்டபோது
தூங்க இடம் கிடைக்கவில்லை!
தனியாகப் படுக்கை அறையும்
கட்டிலும் மெத்தையும்
காற்றுக்கு மின் விசிறியும் கிடைத்தபோது
கண்களுக்குத் தூக்கம் மட்டும் கிடைக்கவில்லை!



வேர்க்க வேர்க்க நடந்த போது
கால் வலிக்கவில்லை!
நடக்கவே தேவை இல்லாமல்
சொகுசு நாற்காலியில் சாய்ந்து
உட்கார்ந்திருக்கும்போது
கால் வலிக்கிறது!

ஏதும் இல்லாமல்
அழவேண்டிய நேரத்தில்
அழுகையே வரவில்லை!

எல்லாமே இருக்கிறது என்று
சிரிக்கவேண்டிய நேரத்தில்
சிரிக்க முடியவில்லை!

குந்தக் குடிசையற்றவன்
குதூகலமாய் இருக்கிறான்
கோடீசுவரன்
குமுறிக் கொண்டிருக்கிறான்!

எனவே, பணம்
துன்பத்துக்கோ இன்பத்துக்கோ
காரணம் இல்லை
மனம்தான் காரணம்!

அரண்மனையில்
சித்தார்த்தனுக்கு இருந்த துன்பம்
போதி மரத்தடியில்
புத்தனுக்கு இல்லை!



மனத்தைப்போல்
ஒரு மனிதனுக்குப் பகை
உலகத்தில் எதுவும் இல்லை

மனம்...
ஒரு நொடிக்கு

ஆயிரம் ஆயிரம் கனவுகளையும்
கற்பனைகளையும் வளர்த்துக்
கொள்வது!

எதிர்பார்ப்புகளை உண்டாக்கி
ஏமாற்றங்களைக் கொடுத்து
ஏக்கங்களையும் இன்னல்களையும்
வலிய வலிய வாங்கிக்கொடுத்து
நம்மை வாட்டுவது.

மனத்திற்கு
நல்லதும் தெரியும்;
கெட்டதும் தெரியும்;
தெரிந்தே
கெட்டதைத் தேடச்சொல்லும்!



இந்த மனம்
அடக்க நினைக்கும் போதுதான்
தறிகெட்டுத் தாண்டிக் குதிக்கும்...

இது ஒரு காட்டாற்று வெள்ளம்;
கரை கட்டினால்
நன்மை கொடுக்கும்;
கட்டத் தவறினால்
நம்மை அழிக்கும்!
மனம்
இது ஒரு சந்தர்ப்பவாதி;




கட்சி தாவும் அரசியல்வாதிகளைக்
காட்டிலும் மோசமானது!

இது ஒரு
கள்குடித்த காட்டுக்குரங்கு
மாளிகையில் ஒரு நினைவு
மயானத்தில் ஒரு நினைவு
ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லாத
முரண்பட்ட நினைவுகள் அவை!

வீதியில் படுத்துக்கிடக்கும் நாய்
ஏதோ ஞானத்தவம் செய்வதைப்போல்
கண்ணை மூடிப் படுத்துக் கொண்டிருக்கும்;
ஓர் எச்சில் இலை எங்காவது விழுந்தாலும்
அந்த நாயின் ஞானத்தவம்
கணப்பொழுதில் கலைந்து போகும்.



மனித மனமும் அப்படிப் பட்டதுதான்!
நான்கு பேர் தோள்களில்
எட்டுக்கால் பூச்சிபோல்
ஒருவன் இறுதி ஊர்வலம் போய்
பிடிசாம்பல் ஆகப்போகும் தருணத்தில்

வந்த போது என்ன
கொண்டு வந்தோம்?
போகும் போது என்ன கொண்டு
போவோம்?

என்று மயானக்கூத்து மேடையில்
எல்லோரும்தான்
பட்டினத்தார் வேஷம் போடுகிறோம்!

மயானத்தை விட்டு
ஓர் அடி எடுத்துவைக்கும் முன்னரே
அந்தப் பட்டினத்தார் சிந்தனைகளையும்
அங்கேயே சாம்பல்
ஆக்கிவிட்டு வருகிறோம்!

நாம் நாமாகவே இருக்கிறோம்
அரிதாரம் பூசாமல் போட்ட வேஷம்
அங்கேயே கலைந்து போய் விடுகிறது!

பின்னர்
காமுகன் காமுகனாகவே இருக்கிறான்;
கள்வன் கள்வனாகவே இருக்கிறான்
அரசியல்வாதி அரசியல்வாதியாகவே
இருக்கிறான்;
வட்டிக் கடைக்காரன்
வட்டிக் கடைக்காரனாகவே
வாழ்கிறான்.



கணநேரம் மட்டுமே இருந்த அந்த
மயானச் சிந்தனைகள்
காலம் முழுவதும் மனிதனின் மனத்தில்
குடிகொண்டு விடுமானால்

தனக்கும் துன்பமில்லை:
அடுத்தவர்க்கும் அல்லல் இல்லை:

மரணத்தைப் பற்றிய அச்சமும்,
வாழ்க்கையைப் பற்றிய ஆசையும்தான்
மனிதனைச் சிறைப்படுத்தும் விலங்குகள்.

மெய்யல்லாத ஒன்றை
மெய்யென்று நம்பி ஒரு
பொய்யான வாழ்க்கை
வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.

நிலையாமைத் தத்துவம் என்பது
மனித முயற்சிகளை மழுங்கடிக்கவும்
வேதாந்தி வேஷம் போடவும் மட்டுமே
இந்நாட்டில் பயன்படுத்தப் பட்டிருக்கிறது.



ஆனால்
என்னைப் பொறுத்தவரை
நம்மைப் பற்றி மட்டுமே
நாம் கவலைப்பட்டுக் கொண்டிருக்காமல்
நாளைய சமுதாயத்திற்கு
நாம் செய்யவேண்டிய
கடமைகளை விரைவுபடுத்துவதற்கும்
அதற்கான முயற்சிகளைக்
கூர்மைபடுத்துவதற்கும்
பயன்படுத்தப்படவேண்டும்
என்று இருக்கிறேன்.

நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும்
என்ற திருக்குறள்
நிலையாமையைக் காட்டி
அச்சுறுத்துவதற்காக அல்லாமல்
சமுதாயத்திற்கு விரைந்து
நன்மை செய்ய வேண்டும் என்று
நெறிப்படுத்துவதற்காகவே பாடப்பட்டதாகும்!

காலம்
மற்றவர்களை அழித்த
ஆதிக்ககாரர்களுக்கு
ஆழமாகவே குழிதோண்டி வைத்திருக்கிறது.
மற்றவர்களுக்காக உழைத்தவர்களின்
கல்லறைகளுக்கே கூட
உயிர் கொடுத்துக்
காத்து வந்திருக்கிறது!



சாவு இன்பமானது;
சாவு துன்பத்தில் இருந்து
நமக்குச் சுதந்திரம் அளிப்பது.

இந்தப் பக்குவம் வந்து விட்டவர்கள்
நொடிக்கு நொடி செத்துப் பிழைக்கும்
துன்பம் உறுவதில்லை

“வாழ்வு முற்றிலும் கனவெனக் கூறிய
மறை சான்றோர்கள்தம்

உரைபிழை யன்றுகாண்”
என்ற பாரதியின்
வார்த்தை பொய்யாகவில்லை

“நாமார்க்கும் குடியல்லோம்
நமனை அஞ்சோம்”
என்று பாடிய அப்பரின்
மனம் வேண்டும்.

நமனை அஞ்சாதவனால் மட்டுமே
நாமார்க்கும் குடியல்லோம் என்று
தலை நிமிர்ந்து நிற்க முடியும்.

நோய் என்பது என்ன?
நம் உடலில் ஏற்படும் பழுதா?
இல்லை அதுவல்ல நோய்!



இந்த உடலில் ஏற்படும் பழுது
உயிர் போவதற்கு-
சாவதற்குக் காரணமாய்
அமைந்து விடுமே என்று
கலங்கிச் செய்கிற
துன்பத்தை - கலக்கத்தை -
கவலையைத் தருகிறது;
அதனால் அதனை நோய் என்கிறோம்!

நோய் என்பது துன்பம்
எந்த நோயும் (உடற்பழுதும்) சாவுக்குக்

காரணம் ஆவதில்லை
என்று இருந்துவிடுமானால்
அந்த உடற்பழுதுக்காக
அழுதுபுலம்பத் தேவையில்லை!

இந்தப் பூமியில்
இன்று இருக்கும் எதுவும்
நிரந்தரமானதில்லை!
நாளை இருக்கப்போவதும்
இல்லை!

ஒரு காலத்தில்
குமரிக் கோடாக இருந்தது
இன்று கடலாக இருக்கிறது

ஒரு காலத்தில்
புகழ்பெற்று வாழ்ந்து கொண்டிருந்த
பூம்புகார் இன்று
எவர் கண்ணுக்கும் புலப்படாமல்
கடலுக்குள் ஆழ்ந்து கிடக்கிறது.



இமயம் இல்லாத காலமும்
இருந்திருக்கும்!
கங்கைத்தோன்றாத காலமும்
இருந்தே இருக்கும்!

ஓராயிரம் ஆண்டுகள் கழித்தோ
அய்யாயிரம் ஆண்டுகள் கழித்தோ

மீண்டும் இவை
இல்லாமற் போகலாம்!

மனிதனின் உயர்ந்தபட்ச ஆயுட்காலம்
நூறு ஆண்டுகள் என்று
இயற்கை உச்சவரம்பு
வைத்திருப்பதைப் போல
மலைக்கும் நதிக்கும் ஆயுட்கால
உச்ச வரம்பு
இல்லாமல் இருக்கலாம்!

ஆனால்...
ஒன்று நிச்சயம்
உலகில் தோன்றிய எல்லாம் அழியும்
அல்லது
வேறொன்றாக மாறும் - திரியும்!



காக்கையும் குருவியும்
மாடும் எருமையும்
மற்ற உயிரினங்களுமே
இந்த மனிதனைப் போல
மரண பயம் கொள்வதற்கு
நியாயம் இல்லை

தன் கன்றுக்குட்டியின்
நாளைய பசிக்கென்று
இன்றே புல்பிடுங்கிச்

சேமித்து வைத்துவிட்டு
எந்த மாடும் மடிந்து போவதில்லை!

தங்களின்
குஞ்சுகளின் எதிர்காலத்துக்கென்று
தானியங்களை எந்த வங்கியிலும்
சேர்த்து வைத்துவிட்டு
எந்தப் பறவையினமும் செத்துப்
போனதில்லை!



மலையில் பெய்கிற
மழைநீர்
எந்த அருவியில் வீழ்ந்து
எந்த ஆற்றில் பாய்ந்து
எந்தக் கடலில் கலந்து
எந்தக் காட்டில் வயலில்
சென்று சேருகிறது என்ற
முன்னறிவிப்பில்லாமல்தான்
ஓடிக் கொண்டிருக்கிறது!

காற்றுக்குப் பாட்டுச் சொல்லிக்
கொடுத்தவனும் இல்லை!
ஆற்றுக்குப் பாதை போட்டுக்
கொடுத்தவனும் இல்லை!
ஆறு என்பதற்கு
பாதை அல்லது வழி
என்பதுதான் பொருள்.

பிறர் பார்த்துப்
பாதை அமைத்துக்
கொடுக்காமல்
தனக்குத்தானே பாதை
அமைத்துக் கொண்டு
ஓடியதால்தான் ஆற்றுக்கு
ஆறு என்று பெயர்
வந்திருக்கவேண்டும்!

அந்த ஆற்றைப் போலத்தான்
நம் வாழ்க்கையும்
ஒரு முன்னறிவிப்பும் இல்லாமல்
எங்கோ போய்க் கொண்டிருக்கிறது!



இதுதான் எல்லை
என்றும் தெரிவதில்லை!
இந்த நாள்வரைதான்
பயணம் என்றும் புரிவதில்லை!

உடல் நலமில்லாமல்
படுத்துக் கொண்டிருக்கின்றவனைப் பார்த்து
நலம் விசாரிக்கப் போகிறவன்
நடுவழியில் மாண்டு போகிறான்!

நோயாளியைக் குணப்படுத்தச்
செல்லும் மருத்துவர்
மருத்துவமனைக்குச் சென்று சேராமலே
மடிந்து போகிறார்!

நோயோடு போராடிக்
கொண்டிருந்தவன்
நலம் பெற்று
வீடுவந்து சேருகிறான்!

வாழ்க்கைக் கோர்ட்டிலே
மரண தண்டனை கொஞ்ச நாள்
ஒத்திப் போடப்படுமே தவிர
ரத்துச் செய்யப்படுவதில்லை!

கிடக்கிற பிணங்களுக்காக
நடக்கிற பிணங்கள்
அழுது கொண்டிருக்கும்
அதிசயமான உலகம் இது!

நோயோடு நூறாண்டு
வாழ்ந்தவனும் உண்டு
நோய் நொடியே இல்லாமல்
ஆறாண்டில் அகால மரணம்
அடைந்தவனும் உண்டு.



எனவே
நோய் அல்ல சாவுக்குக் காரணம்
பிறப்பே இறப்புக்குக் காரணம்
பிறக்காதவனுக்கு மட்டுமே
இறப்பில்லை!

இல்லாத ஊருக்குத்தான்
பாதை இல்லை;
ஊர் என்று ஒன்று இருந்தால்
வழி என்று ஒன்று
நிச்சயம் இருக்கும்.

பிறந்த தேதியைக்
குறித்து வைக்கும் குறிப்பேட்டில்
இறக்கப் போகும் தேதிக்கு
இடம் ஒதுக்கி வைத்துவிட்டுத்தான்
வேறு வேலை பார்க்கவேண்டும்!

வாழ்க்கையில்
பிறப்பு மட்டும்தான் என்ற
ஒருவழிப்பாதைச் சட்டம்
செல்லுபடியாகாது!



இரத்த ஓட்டமும்
இதயத் துடிப்பும்
இருக்கும்வரைதான்
மனிதனுக்குத் துன்பத்தை
உணரும் துன்பம்!
அவை நின்றுவிட்ட மறுகணமே
அடுத்தவர்கள் அழுகின்ற
அவலக் குரலும் கேட்பதில்லை!

கலங்கி வடிக்கின்ற
கண்ணீர்ச் சுவடுகளும்

தெரிவதில்லை
இந்த உடலை
சுட்டாலும் எரிவதில்லை!
புதைத்தாலும் நோவதில்லை!

ஆதரவில்லாமல்
அழ அழ
இவர்களை எல்லாம் விட்டுவிட்டுப்
போகிறோமே என்று
மரணம் என்னும் மெய்யான சுதந்திரம்...
நிரந்தரமான சுதந்திரம்
வரும்போது
அழுவதும் அரற்றுவதும்
அறிவீனம்!



யாரும் யாரையும்
விட்டு விட்டுப்போவதால் எதுவும்
கெட்டுவிடப் போவதில்லை!
ஒரு வழி அடைபடும்போது
மறுவழி தானாகத் திறந்து கொள்ளும்!

கால் முறிந்து விட்டவன்
நடக்காமலா இருக்கிறான்?
எலும்பும் தசையுமாக இருந்து
நடக்க உதவிய இயற்கைக்கால்
இருந்த இடத்தில்
ஒரு மரத்தினால் செய்யப்பட்ட

செயற்கைக்கால் இருந்து
நடக்க உதவுவதில்லையா?

இன்னாருக்கு இன்னார்தான் துணை
என்பது ஒரு மாயை-
மூட நம்பிக்கை-
நெல்லுக்கு நீர் பாய்ச்சுகிறார்கள்
புல்லுக்கு யார் பாய்ச்சுகிறார்கள்?

இசுலாமியர்கள்
குழந்தை பிறக்கும் போது
அழுகிறார்கள்;
இறக்கும் போது அழுவதில்லை.

மரணம் துன்பச் சிறையில் இருந்து
கிடைக்கும் நிரந்தர விடுதலை என்பதை
அவர்கள் உணர்ந்திருக்கிறார்கள்!



இந்த வகையில் நான்
ஓர் இசுலாமியனாக
இருப்பதையே விரும்புகிறேன்!

சாவு ஒரு சாந்தி நிலையம்!
அது துன்பத்தின் பேய்வீடு அன்று!
அந்தச் சாந்தி நிலையத்தை நோக்கிப்
போகிற வழிமட்டும்தான் துன்பமானது!
சேரும் இடம் அல்ல!

துன்பத்தைத் தாண்டிச் செல்லாமல்
இன்பத்தை அடைய முடியாது!
அடிமைத்தளையை அறுக்காமல்!
விடுதலை கிடைக்காது!
வெயிலே இல்லாமல்
மழை பெய்யாது.

இன்றுவரை வாழ்ந்த நாட்கள்
அசல் (முதல்) என்று கருதுங்கள்!
நாளைக்கு நாம் இருந்தால்
அதை இலாபம் என்று வரவு
வைத்துக்கொள்ளுங்கள்!

நாளை என்பது நமக்கு
இல்லை என்றால்
நஷ்டம் என்று மட்டும் எடுத்துக்
கொள்ளாதீர்கள்!
நமக்கு எதுவுமே நஷ்டம் இல்லை;
எல்லாமே இலாபம்தான்!



பிறக்கும்போது
ஊமையாகப் பிறந்தோம்
பின் பேசக் கற்றுக்கொண்டோம்
படுத்துக்கிடந்தோம்
பின்னர் தவழ்ந்தோம் எழுந்தோம்
நடந்தோம் ஓடினோம்
பசியோடு பிறந்தோம்

பாலுண்டும் சோறுண்டும்
வளர்கிறோம் வாழ்கிறோம்!

வெறுங்கையோடு வந்தோம்
நினைக்கின்ற எல்லாம் பெற
இயலாவிட்டாலும்
ஏதோ பெற்றிருக்கிறோம்!

கண் திறந்து பார்க்கவும்
சக்தி இல்லாமல்தான்
மண்மீது வந்து விழுந்தோம்
திங்களையும் ஞாயிறையும்
கடலையும் நதியையும்
மேகத்தையும் மின்னலையும்
அன்னையையும் தந்தையையும்
மனைவியையும் மக்களையும்
காணும்பேறு பெற்றோம்!



எனவே
வாழ்க்கைப் பேரேட்டில்
இழப்பு நஷ்டம் என்ற
சொல்லுக்கே இடம் இல்லை!
எல்லாமே இலாபம் தான்!

கண்பார்வை போயிருந்தால்
இடையில் வந்த இலாபம்
போய் விட்டது என்று

கருதிக் கொள்ளுங்கள்
பிறந்ததில் இருந்தே
கண்பார்வை இல்லை என்றால்
வரவும் இல்லை செலவும் இல்லை
இலாபமும் இல்லை
நட்டமும் இல்லை
கணக்குச் சரியாகப் போய் விட்டது
என்று எழுதிக்கொள்ளுங்கள்!





# தாய்

தாய்...
எந்தப் பொருளையும் சொல்லில்
சிறைப்படுத்தலாம்
ஆனால் தாய் பற்றி
எத்தனை சொன்னாலும்
அந்தச் சொற்கள் எல்லாம்
செல்லுபடியாவதில்லை!



வானத்துக்கும்
வார்த்தைக்கும் எட்டாமல்
உயர்ந்து நிற்பது தாய்!

தாயை - தெய்வம் என்கிறார்கள்
அதனால்
தாய் என்று
ஓங்கி உயர்ந்து
எல்லை கடந்து
நிற்கும் ஒன்று
சுருங்கி விடுவதாகவே
நான் கருதுகின்றேன்!

தெய்வம் பிரச்சினைக்குரியது!
தாய் பிரச்சினைக்குரியதன்று
தெய்வ மறுப்புக் கொள்கை
எங்கும் என்றும் உண்டு!
தாய் மறுப்புக் கொள்கை
எங்கும் என்றும் இருந்ததில்லை!

தாய் பற்றிய உயர்ந்த கோட்பாடு
உலகெங்கும் பொதுவானது
சரியாகச் சொன்னால்...
தனக்குவமை இல்லாதது
தாய் மட்டும்தான்!



தாய் படைப்புக்கர்த்தா
தந்தை அதற்குக் கருவி
குழந்தைக்குப் பாலூட்டிக்
கொண்டிருக்கும் தாயின்
வடிவம் போல்
வழி படத்தக்க பேரழகு
இந்த வையகத்தில்
எங்கும் இல்லை!

தாயின் உடல் அமைப்பே
விந்தையானது; வியப்பானது!
கருத்தரித்த குழந்தை
பத்து மாதம்வரை
வளர வயிற்றில்

பாதுகாப்பான உறையுளும்,
பத்துமாதங் கழித்துப்
பிறந்த குழந்தையின் பசியாற்ற
சிவப்பு இரத்தத்தை
வெள்ளைப் பாலாக
மாற்றித்தரும்
உணவகமும் இருக்கின்றன.

தன் உடம்பையே குழந்தைக்கு
உறைவிடமாகவும் உணவகமாகவும்
மாற்றித் தருகின்றவள் தாய்.

கோவிலில் கடவுட்சிலை இருக்கும்
இடத்தைக் கர்ப்பக்கிருகம் என்றது
தாய் வயிற்றைக் காப்பி அடித்து
வைத்த பெயர்தான்!

தாய் வயிறு என்னும்
கர்ப்பக்கிருகம்தான் அசல்!
கோயில் கர்ப்பக்கிருகம் நகல்!



கல்வி வெளிச்சமும் மிக இயலாமல்
இருந்த ஒரு சிற்றூரில்
ஓர் ஏழைத்தாய்
என்னை ஈன்றெடுத்தாள்!

அந்த ஏழைத்தாய்
தன் ஏழ்மையையும்
வறுமையையும்தான்
எனக்காகச்
சேமித்து வைத்து விட்டு
இருபத்து நான்காண்டுக்கு முன்னால்
என் கண்களின்
உறக்கத்தைக் கெடுத்துவிட்டுக்
கண்மூடிக்கொண்டாள்!

அந்தத்தாய்
கண்மூடிக் கிடந்த
கடைசிக் கோலத்தைக் கூட
என் கண்கள் காணவில்லை
மண்மூடிக் கிடந்ததை
மட்டும்தான் நான் கண்டேன்!



என் தாய்
எனக்காகச் சேமித்து வைத்தது
அவ்ளது ஏழ்மையையும் வறுமையையும்
என்று சொன்னது
கேலி செய்ய அன்று

தாயை எவரேனும்
கேலி செய்வார்களா?
ஆம்...
மெய்யாவே அவள் எனக்காகச்

சேமித்து வைத்துவிட்டுப் போன
அந்த ஏழ்மையை...
அந்த வறுமையை...
என் செல்வமாகத்தான்
நான் இன்றும் கருதுகிறேன்!

அந்த ஏழ்மையும் வறுமையும்தான்
வாழ்க்கையின் அர்த்தத்தை
எனக்குச் சொல்லிக் கொடுத்தன!

எனக்கு அந்த ஏழ்மையும்
வறுமையும்தான் ஆசான்கள்
அர்த்த சாஸ்திரங்கள்

மனிதனுக்கு
படிப்பறிவு என்பது
வட்டில்சோறு போன்றது!
பட்டறிவு என்பது
அட்சய பாத்திரம்!
நான் படித்தறிந்தது கொஞ்சம்
பட்டறிந்தது அதிகம்!



பாறைக்குள்ளே விழுந்து
கிடந்த விதைகூட
முளைத்து மரமாவதில்லையா?
அப்படித்தான்
நானும் வளர்ந்திருக்கிறேன்

காட்டிலே
வேலி ஓரத்திலே இருக்கும் கற்றாழை
வெறும் முள் என்றுதான்
மற்றவர்க்குத் தெரியும்!

அது மண்ணுக்குள் வேரோடு
மறைத்து வைத்திருக்கும் உணவு
கற்றாழைக் கிழங்கு
எத்தனை பேருக்குத் தெரியும்?

எனக்கந்த உணவைத் தெரியும்
என் வயிற்றுப் பசியைப்
பல நேரங்களில்
ஆற்றிய அந்தக் கற்றாழை
என் பார்வையில்
முள் மரம் அன்று
காலத்தால் உதவி செய்த
கற்பக விருட்சம்!



என் ஏழைத்தாய் கடப்பாறையை
எடுத்துக் கொண்டு போய்
கைகளில் கொப்புளங்கள்
தோன்றத் தோன்ற
அந்தக் கற்றாழையைத் தோண்டி
எடுத்து கல்லடுப்பு வைத்து
கிழங்கை வேகவைத்து
எனக்கு உணவாகப் பரிமாறினாள்!

எனக்குள்
தளராத தன்னம்பிக்கை
அயராத முயற்சி
ஓயாத உழைப்பு
என்ற மூன்றையும் உருவாக்கி
என் முன்னேற்றத்திற்கு
வழிகாட்டிய என் தாய்
எனக்கென்று விட்டுப் போன
ஏழ்மையும் வறுமையும்தான்!

அதற்காக நான் அவளுக்கு
நன்றி சொல்ல வேண்டும்!

இந்த வாழ்க்கை
என்ற வழிப்பயணத்தில்
நான் எதை எதையோ பார்த்திருக்கிறேன்!
எதை எதையோ சிந்தித்திருக்கிறேன்!
போதிமரம் புத்தனுக்கு
ஞானம் கொடுத்தது!
துன்பங்கள் இந்தப் பித்தனுக்கு
ஒருசிலவற்றைச் சிந்திக்கத்
கற்றுக் கொடுத்தன!



காடு கரம்பிலே
வயல் வரப்பிலே
பாடுபடும் ஏழைத்
தாய்மார்களின் வாரிவிடப்படாத

கூந்தலைப் போல
நான் சிந்தித்த
ஒரு சில சிந்தனைகள்
ஒழுங்கான வடிவம் பெறாமல்
என் இதயத்துக்குள்ளே
அங்கும் இங்கும்
அலைந்து கொண்டிருக்கின்றன!



அவற்றை
ஒழுங்கு படுத்திப்
பதிவு செய்து வைத்தால்
என்ன என்று எண்ணினேன்
தாயின் தாய் என் தம்பி
வார்த்தைச் சித்தர் வலம்புரி ஜான்
என் சிந்தனைகளைத் தாய்
மொழியில் சொல்லலாம் என்றார்!

'தாய்' பெற்ற பிள்ளைகளே! (வாசகர்களே)
நான் ஒன்றும் பெரிய தத்துவஞானி
அல்லன்
எனக்கு எது தெரியுமோ
தெரியாதோ
எனக்குத் தெரிந்தது பெரிதாக ஒன்றும்
இல்லை என்பது மட்டும்
எனக்கு நன்றாகத் தெரியும்!

வாழ்க்கைக் கடலுக்குள்
என் கைக்குப்பட்டதை எல்லாம்
கரைக்குக்கொண்டு வந்திருக்கிறேன்!
அவை எல்லாமே
முத்துக்களாகத்தான் இருக்கும் என்ற
மூட நம்பிக்கை எனக்கில்லை!



ஒருவேளை
தப்பித்தவறி ஒன்றிரண்டு
முத்துக்கள் இருந்தாலும் இருக்கலாம்
தேடிப் பாருங்கள்!



# டைரியில் ஞாயிற்றுக்கிழமை



நான் ஒரு டைரியை வாங்கி
அதில் ஜூன் 7ஆம் தேதி
ஞாயிற்றுக் கிழமையைத் தேடினேன்
5 இருந்தது
6 இருந்தது
8 இருந்தது
7 மட்டும்
தலைமறைவாகி இருந்தது.

ஐம்பத்து ஒரு
வயதைத் தாண்டிவிட்ட
என் கண்களின் கையில்
அவ்வளவு சீக்கிரமாக அது சிக்கவில்லை!

ஒட்டுக்குடித்தனம் இருப்பவனைப்போல
அந்த ஏழாம் தேதி
ஆறாம் தேதியின் பக்கத்திலேயே
கீழே ஒண்டிக் கொண்டிருந்தது.

இந்த ஏழாம் தேதி
ஞாயிற்றுக்கிழமை மட்டும்தான்
இப்படி ஓசித்தாள்களில் இருக்கிறதா?
இல்லை எல்லா ஞாயிற்றுக்கிழமைகளும்
இப்படித்தானா? என்று
துப்புத்துலக்க நினைத்து
பக்கங்களைப் புரட்டிப் பார்த்தேன்!

எல்லா ஞாயிற்றுக் கிழமைகளுக்கும்
சொந்த வீடு
பட்டா நிலம் எதுவும் இல்லை!



காரணம்
ஞாயிற்றுக்கிழமை ஓய்வு நாள்
உழைக்காத அல்லது
வேலை இல்லாத நாள்!

உழைக்காத நாளுக்கு தனிப்பக்கம்
சொந்தவீடு வைத்துக் கொள்ள
உரிமை இல்லை!

ஒரு வருசத்தில் எல்லா நாட்களுமே
ஓய்வு நாட்களாக உழைக்காத
நாட்களாக இருக்கும்
இந்த நாட்டின் சுகஜீவன்களை
இந்த டைரியின் அமைப்பு முறை
எந்த வகையிலும் கட்டுப்படுத்தாது.

காரணம் அவர்கள் உழைக்காமல்
சுகஜீவனம் நடத்துவதற்கென்றே
கடவுளால் படைக்கப்பட்ட
புண்ணிய மக்கள்!

அவர்கள் போன ஜென்மத்தில்
செய்த புண்ணியம்
இந்த ஜென்மத்தில் உழைக்காமல்
சுகஜீவனம் நடத்தலாம் என்று
இறைவனிடம் உரிமச் சீட்டுப்
பெற்று வந்திருந்தவர்கள்!

என்னைப் பொறுத்தவரையில்
சுகஜீவனம் நடத்துபவர்கள்
கொள்ளைக்காரர்களைவிடக்
கொடியவர்கள்!
காரணம்?
கொள்ளையடிப்பது கூட
ஒரு சிக்கலான
உழைப்பு; தொழில்!



சுகஜீவனம் அப்படி இல்லை
எந்தச் சிக்கலும் இல்லாமல்
உழைப்பும் இல்லாமல்
சமுதாய மரியாதையோடு நடக்கின்ற
கொள்ளை!

சுகஜீவனானவர்களுக்கு -
இறைவனின் செல்லப் பிள்ளைகளுக்கு-
இந்த டைரியின் தத்துவங்கள் ஒத்துவரா!
அவர்களை விலக்கிவிட்டுப் பார்த்தால்
இந்த ஞாயிற்றுக்கிழமைக்கு
ஒரு டைரி தந்திருக்கிற மரியாதை
நமக்குப் புரியும்.

ஞாயிற்றுக்கிழமை வேலைநாள்
இல்லாமல் இருப்பதால்
அதிகமான குறிப்பு
எழுத நிகழ்ச்சிகள் இல்லை.

எனவே
இந்த அளவு சிறிய இடம் மட்டுமே
ஞாயிற்றுக்கிழமைக்குப் போதும்
என்று தெரிகிறது



நியதிப்படி வாழும் மனிதனுக்கு
ஞாயிற்றுக்கிழமை
குறிப்பிட்டுச் சொல்லும்
நாளாக இருப்பதில்லை

ஒரு நாள் மனிதனுக்கு எந்த
அளவுக்குப் பயன்படவேண்டும்
அல்லது பயன்படுத்தப்படவேண்டுமோ
அந்த அளவுக்கு அந்த நாள்

பயன்படவில்லை!
அல்லது பயன்படுத்தப்படவில்லை!

பயன்படுகின்ற நாட்கள்
வாழ்நாட்கள்!
பயன்படாத நாட்கள்
வீணாட்கள்!
நாள்என ஒன்றுபோல் காட்டி உயிரீரும்
வாள்அஃ துணர்வார்ப் பெறின்
என்ற வள்ளுவனின் வாழ்க்கைத் தத்துவத்தைப்
புரிந்துகொண்ட எவரும்
ஒரு நாள் வீணாகப் போவதை
விரும்பமாட்டார்கள்!



டைரியின் அர்த்தப்படி
வாரத்தில் ஆறு நாட்கள்
குறிப்பிடத்தக்க அளவுக்குப்
பயன்படும் நாள்கள் எனினும்
ஒருநாள் அத்தகு சம்பவங்கள்
அற்ற நாள் என்று படுகிறது.

ஒரு சரித்திரம் என்பது
ஆற்று வெள்ளம் என்றால்
ஒரு சம்பவம் என்பது
அதில் ஒரு சிறு துளி!
பல துளி பெருவெள்ளம் ஆகிறது

எனவே பல சம்பவங்கள்
ஒரு சரித்திரம் ஆகிறது!
ஞாயிற்றுக்கிழமையில் சம்பவங்கள் இல்லை.
அல்லது மிகக்குறைவு

எனவே மனிதனின் சரித்திரத்தில்
சம்பவங்களைத் தருகின்ற வாய்ப்பு
ஞாயிற்றுக்கிழமைக்குக் கிடைக்கவில்லை

எனவே ஒரு சரித்திரத்தில்
பங்கு கொள்ளும்போது
மற்ற நாட்களுக்குக் கிடைத்ததைப் போல்
ஞாயிற்றுக் கிழமைக்கு கிடைக்க வழியில்லை

உழைக்கின்றவன் ஓய்வெடுக்க
ஒரு நாள் வேண்டாமா? என்றால்
வேண்டும்!
உழைக்கிறவன்தான்
ஓய்வெடுக்க வேண்டும்
ஓய்வு வேண்டுமா வேண்டாமா?
என்ற கேள்வி
இங்கு தேவையில்லை



தேவையற்ற ஓர் ஓய்வு நாளுக்கு
டைரி கொடுத்திருக்கிற இடத்தை வைத்து
நாள் உணர்த்துகின்ற
நாளின் மேன்மையைப்
புரிந்துகொள்கிறேன்

இதிலே கூட
நான் ஒரு சித்தாந்த
நீதியிலான படிமத்தைப்
படித்துக்கொள்கிறேன்

இந்த உழைக்காத ஏழாவது
நாள் என்பது
ஒரு கையில் இருக்கும்
ஆறாவது விரல்போல
எனக்குத் தெரிகிறது



சரித்திரத்தில் பங்கு பெறும்
சிறப்பில்லாமல் சிதைந்து போகின்ற
ஞாயிற்றுக் கிழமையைப் போல
என் வாழ்வில் எத்தனை
நாட்கள் கழிந்து போயின?
உழைப்பில்லாமல் உதிர்ந்து போயின?
என்று ஒரு கணக்குப் போட்டுப்
பார்த்துக் கொள்ளவும் இது உதவியது.

வாரத்தில் எத்தனை நாட்களை
ஞாயிற்றுக் கிழமைகள் ஆக்கிவிட்டோம் என்று
என்னை நானே கேட்டுக்கொண்டேன்

என் பேனா எத்தனை நாட்கள் வாய்மூடி
படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கிறது
என்று நினைத்துப்பார்த்தேன்

ஓர் உழைப்பில்லாத நாளுக்குத்
தனி இடம் ஒதுக்கி வைக்கச் சொல்லும்
உரிமை இல்லை என்பதைப் பார்த்தபோது
இந்த டைரியில் வகுத்திருக்கும்
நியதியும் நீதியும் மனித சமுதாயத்தில்
நடைமுறைத் தத்துவமாக முழுமையாக
நிறைவேற்றப் பட்டிருக்குமானால்
இந்தச் சமுதாய வீதியில்
இத்தனை மேடு பள்ளங்களை நாம்
சந்தித்திருக்க மாட்டோம்!

இந்த மேடு பள்ளங்கள்தான்
ஒரு தேசத்தில்
எத்தனை எத்தனையோ விபத்துக்களுக்குக்
காரணிகள்!

உழைப்பவனின் வாழ்க்கைப் பாதையில்
உழைக்காதவன் உட்கார்ந்து கொண்டு
வெட்டி வைத்திருக்கிற குழிகளும் பள்ளங்களும்
என் கண்ணில் தெரிகின்றன



அப்படிக் குழிவெட்டிய உழைக்காதவனை
உயர்ந்த இடத்தில் உட்காரவைக்க
பொருளாதார மேட்டை இந்த உழைப்பவன்
உருவாக்கி வைத்துவிட்டு
ஏமாந்து போய்க்கொண்டிருப்பதையும்
நான் பார்க்கிறேன்!

ஒரு மிகப்பெரிய கொடுமை...
எல்லா நாட்களையும்
ஞாயிற்றுக் கிழமைகளாக கழிக்கின்றவர்கள்
சமுதாயத்தில் பெரிய
இடங்களைப் பெற்றிருக்கிறார்கள்!

ஒரு நாளைக்கூட ஞாயிற்றுக்கிழமையாகப்
பயன்படுத்த இயலாதவனுக்கு
எந்த இடமும் இல்லை!



ஏட்டிலே (டைரியில்) காணப்பட்ட
நியதியும் நீதியும்
நாட்டிலே இல்லையே
ஏன்? ஏன்?





ஒரு பஞ்சாலைத் தொழிலாளியாக வாழ்க்கையைத் துவங்கி தமிழக அரசின் அரசவைக் கவிஞராக - சட்டமேலவை உறுப்பினராக - வாரியத் தலைவராக - என உழைப் பாலும் தனது புலமையாலும் உயர்ந்தவர் புலவர் புலமைப்பித்தன் அவர்கள்.

ஈரோட்டைப் பாசறையை தனது தாய்வீடாக்கி - பொன்மனச்செம்மல் புரட்சித்தலைவரின் செல்லப் பிள்ளை யாக இனம் கண்டு கொள்ளப்பட்டவர்.

கலைமாமணி - பாவேந்தர் விருது - திரைப்பட பாடலாசிரியர் விருது போன்ற பல்வேறு விருதுகளுக்குச் சொந்தக்காரர்.